6-1

# ஐந்து மணிகள்



ஆசிரியர் :

ஸ்ரீ பிரகாசானந்த சரஸ்வதி

பிள்ளையார்பட்டி.

# ஐந்து மணிகள்




ஆசிரியர்

பிள்ளையார்பட்டி மடாதிபதியும், மடத்தோடு ஒட்டி
நடத்திவரும் நாராயண பார்மஸியின் தலைவருமான
சுரோத்திரிய பிரம்மநிஷ்ட பரமஹம்ஸ ஸ்வாமி

ஸ்ரீ பிரகாசானந்த சரஸ்வதி



# முன்னுரை

ஆண்டவனுடைய, பிரிய பக்தர்களுடைய வாழ்க்கையிலே இனிய சொற்களைப் படிப்பதனாலேயும், கேட்பதனாலேயும் ஆனந்தமோ பெருகுகின்றது. அத்துடன் உள்ளத்திலே அழுக்கனைத்து மழிந்து அதில் பிரேம பக்தியின் முளையும் உறுதியாகத் தோன்றுகிறது என்பது அனுபவிகளுக்குத் தெரியும். நமது செந்தமிழில் அநேக பக்த வரலாறுகள் சுவையுடன் எழுதப்பட்டுள்ளன. ஆயினும், உணவு உடை முதலிய எல்லாவற்றையும் புதிது புதிதாக விரும்புவது மக்களுடைய இயற்கை. அவ்வாறு வினோதம், தர்மசிந்தையைப் பெருக்கும் வரலாறுகள் நம்நாட்டில் புதிதாக எவ்வளவு உற்பத்தியாயினும் அதிகமாகாது. ஆண்டவனுடைய திருவிளையாடல்களும் அவனடிமையின் வரலாறுகளும் எவ்வளவு படிப்பினும் அதனால் நன்மைதான் வளரக்கூடும். ஆதலால் சில பக்தர்களுடைய வாழ்க்கையை மிகச் சிறிய ரூபத்தில் எழுத எண்ணினேன். 'பக்த சரிதமணிமாலை'யில் ஐந்து மணிகள் இப்பொழுது நல்லோர்களுடைய பார்வைக்காக வெளியிடப்படுகின்றன. இவ்வைந்து மணிகளில் இரண்டு ஹிந்தியிலிருந்தும், மூன்று மராட்டியிலிருந்தும் சேகரிக்கப்பட்டுள்ளன. தாமதமின்றி மற்றும் பலமணிகள் கோர்க்கப்படும். எல்லோரிடத்திலும் கோரிக்கை என்னவென்றால், இம்மணிகளுடைய அழகும் தூய ஒளியும் பரவச்செய்து தங்களுடைய மனம், மொழி, வாழ்க்கை இவைகளைத் தூயனவாக செய்யவேண்டுமென்பதே.

பிள்ளையார்பட்டி
29—4—1946. ஸ்வாமி பிரகாசானந்த சரஸ்வதி.

6-1

# முகவுரை.

சந்தோஷமே ஜீவராசிகளின் லக்ஷியம். இதை நாடியே ஜீவராசிகள் வாழ்க்கைப் போராட்டங்களை கஷ்டத்துடன் நடத்துகின்றன. தன் லக்ஷியத்துக்கு மாருக துன்பம் எதிர்ப்படும்போது அதை விலக்கிக் கொள்ள தன்னுல் கூடிய முயற்சியைச் செய்வதும் பொது தர்மம். இப் பொது தர்மத்திற்கு ஆறறிவு படைத்த மனிதனும் விலக்கில்லை. பொய் முதலிய பஞ்சமஹா பாதகங்களையும் மனிதன் இன்பத்தை நாடியே செய்கிருன். தவருன வழிகளில் செய்யும் முயற்சிகளால் இன்பத்திற்குப் பதில் துன்பமடைந்து கவல்கிருன்.

மனிதனுக்குறும்துன்பங்கள் சாரீரக, மானசிக மாக இரு வழிகளிலும் உண்டாகின்றன. ஆஹார நியமங்களால் தவறு செய்வதால் உடற்பிணிகளையும் அஞ்ஞானத்தினுல் மனநோய்களையும், மனிதன் பெறுகிருன். இவ்விருவகைத் துன்பங்களிலிருந்தும் விடுதலை பெற மனிதன் சதா முயற்சிப்பது இயற்கை.

பக்த சரித மணிமாலையை மனிதர்களின் அஞ்ஞான இருட் பிணி விலகவென்று திரட்டித் தொகுத்தளிக்கும் துறவறம் பூண்ட புண்ணிய சீலர் ஸ்வாமி ப்ரகாசானந்த சரஸ்வதியவர்கள். மக்கள் சமுகத்திற்கென இவ் விருவகைச் சேவைகளையும் புரிந்து வருகிருர். உலக மாய்கையின் பற்றுதலை நீக்கும் துறவறம் மேற்கொண்டவராயிருந்தும் "ஸேவா தர்ம பரம கஹனே யோகினுமபி அப்ரவர்த்த:" என்ற முதுரையை மெய்ப்பிக்கும் நிலையில் மக்கட் சேவையைக்

கடனெனக் கொண்டு உடற் பிணிகளை நீக்க உயர் அவுடதங்கள் கொடுத்து உதவுவதுடன் "அஞ்ஞான மலஜம் தோஷம்" அறியாமையால் விளையும் மனோ துக்கங்களை விலக்க ஞானப் பொன் மலைகளைத் திரட்டியளித்து வருவது புகழ்தற்குரியதாம்.

காலப்போக்கை யொட்டி மனிதர்களின் உள்ள மும் மாறுதலடைகிறது. எப்போதும் பழமையை வெறுத்து புதுமையைக்கொள்ள முயற்சிப்பது மனிதனின் இயல் குணங்களில் ஒன்று. புதிய ருசி தரும் உண்டிகள், புது வர்ண ஆடைகள் விரும்புவது போலவே அறிவைப் பெறுவதிலும் மனிதன் புதிய முறையைத் தேடுகிறான். தற்காலம் அம்முறை சிறு கதைகள் போக்கில் விளங்குகின்றன. அரசியல், மதவியல், தத்துவவியல் எதையும் சிறுகதைரூபத்தில் கற்பதைத்தான் இக்கால மனிதன் விரும்புகிறான்.

இம்மன மாறுதலின் போக்கைச் செவ்வனே உணர்ந்த "பக்த சரித மணிமாலை"யின் ஆசிரியரும் தன்சேவைக்கு அதே முறையைக் கையாண் டிருப்பது மக்களுக்கு எவ்வகையிலும் ஞானத்தை ஊட்டவேண்டு மென்று கொண்டிருக்கும் உயர் குணத்தை வெளிப்படுத்துவ தாகும்.

பன்மொழிகளாலும் காணப்படும் சிறந்த ஞான மணிகளைப் பொறுக்கித் திரட்டி, பக்த சரித மணி மாலையிற் கோர்த்து அளிக்கும் இன்னாருக்கு அரிய அவாவுடைய மக்கள் என்றும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருப்பார்கள். இவ்வெளியீடு அம்

மாலையிற் கோர்த்த 5 ஞான மணியாகும். தர்மத்தின் உயர் தத்துவ போதனையை கதை மூலம் எளியரும் அறியும் வண்ணம் இந்நூல் இயற்றப்பட்டிருக்கிறது.

எல்லாம் வல்ல இறைவன், இதே போன்ற பல மணிகள் கோர்க்கப்பட்ட பக்த சரித மணிமாலை பூர்த்தியாக்கும் முயற்சியில் ஆசிரியருக்கு உடனருள் புரிந்தருள வேண்டுமென்று விழைகிறேன்.

இங்ஙனம்

சென்னை
7-3-46

பண்டித ஜி. கண்ணையா,
உபதேசகர், தயானந்தா மிஷின்
சென்னை.

## விஷய விபரம்

# தாமாஜி

இது பதின்மூன்றும் நூற்றாண்டின் வரலாறு. மகாராஷ்ட்ரத்தில் பன்னிராண்டு அளவு மழை யின்மையால் கொடிய வறுமை ஏற்பட்டது. அந்த வறுமை இன்றும் 'துர்க்காதேவி'யின் பெயரால் வழங்குகிறது. உணவின்மையால் மக்களனைவரும் ஓவென்று கதறினார்கள். ஆயிரக்கணக்கான உயிர்கள் பற்றுக்கோடற்றுப் பறந்தன. ஆயிரம் உடல்களில் பார்ப்பதற்குங்கூட ஒருதுளி இரத்தம் மிஞ்சவில்லை. பலவுயிர்கள் தோற்போர்வையால் மூடப்பட்ட எலும்புக் கூடுகளில் அடைக்கப்பட்டிருந்தன. துன்பம் வரும்பொழுது எவர்க்கு எதுதான் செய்ய நேராது? மரப்பட்டைகளையும், இலைகளையும் உண்டு மக்கள் உயிர் வாழ்ந்தனர் ஆனால், ஒரு யுகம் வரையில் இப்படி எவ்வாறு வாழ்க்கை நடத்த முடியும்? மக்களுடைய துன்பத்திற்கோ ரளவில்லை. கவலையோ நாள்தோறும் வளர்ந்து கொண்டிருந்தது. நாடு முழுதும் பசித்தோரின் கூக்குரல் ஒலித்துக் கொண்டிருந்தது.

* * *

கோவல குண்டா என்னும் நாட்டில் மங்களவாட்டியா என்னும் பகுதி யொன்றுண்டு. அப்பகுதியின் தலைமை, பேரன்பனான தாமாஜீயின் கையில் இருந்தது. அவருடைய மனைவியும் தன் நாயகனைப் போன்று பகவான் பாண்டுரங்கனிடத்தில் பேரன்புடையவளா யிருந்தாள். இடையீடின்றி இறைவன்

பாண்டுரங்கனைத் தியானிப்பதுடன் தன் கடமையை முறைப்படி விருப்பிலராய்ச் செய்து முடிப்பதையே தாமாஜி நோன்பாகக் கொண்டிருந்தார். துன்பத்தினால் வருந்துகின்றவர்களுக்கு எவ்வகை உதவியும் புரிந்து, இன்னல் அகற்றி இன்பமடையச் செய்வதே அவரியல்பு. பகைவரின் இன்னலைக்கண்டும் மனமிளகும் தாமாஜிக்கு, தம் குடிகள் வறுமையால் வருந்துவதைக்கண்டு பொறுக்க முடியவில்லை. அன்புற்ற தம் குடிகளின் அழுகைக் குரலால் அவருள்ளம் வெடித்தது. உணவின்மையால் துடிதுடித்து உயிர்வாழும் மக்கள் கதறும் ஒலியைத் தாமாஜீ சகிக்கமுடியவில்லை. அவருள்ளத்தில் யாரோ ஒருவர் சொன்னார், 'தாமாஜீ! நீ யோசனை செய்வது பொருத்தமில்லை. இந்த நெல் களஞ்சியம் பிறகு என்ன வேலைக் குரியது? திறந்து விடு, கொள்ளை யடிக்கவிடு, எல்லா வுணவுப்பொருளும் இறைவனுடைய பசியுள்ள மக்களுக்கு.' அவ்வளவே, பின் என்ன நடந்தது?

தீனபந்துவின் துன்புறும் மக்களுக்காக நெல் களஞ்சியம் திறந்து விடப்பட்டது. அருளின் முன்னிலையில் அரசன் பயம் எம்மாத்திரம்? தனக்கு வரக்கூடும் துன்பத்தின் நினைவேது? உண்மைப் பக்தர்கள் பிறர் அடையும் இன்பத்தைக் கண்டு களிக்கும் பொருட்டுத் தங்களுடைய முழு உடைமையையும் தியாகம் பண்ணுவர். தம் பொருட்டுத் துன்பம் நேரினும் திருவருட் செயலென்று மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்வர். பசியால் வருந்தும் ஆயிரக்கணக்கான மக்கள் மரணத்தின் வாயினின்று காப்பாற்றப்பட்டனர். திருப்தியுற்ற அவர்களுடைய அந்தர ஆத்மாக்கள் தாமாஜிக்கு ஆசியளித்தன.

எங்கு பிறர் இன்புறுவதைக்கண்டு களிப்பவர் இருக்கின்றனரோ, அங்கு அதைக்கண்டு வருந்துகின்றவர்களின் எண்ணிக்கையும் குறைவன்று. பக்தனுடைய பொங்கிவரும் புகழையும், துணையற்ற குடிகளின் சுகத்தையும் கண்டு சில வஞ்சகர் பொறாமைப் பட்டனர். அவருள் முதன்மை பெற்றவன் தாமாஜியின் உதவியாளனான படைத்தலைவன். அவன் அரசன் சன்னதிக்குத் திருமுகம் ஒன்றை எழுதி யனுப்பினான். 'தாமாஜிக்கு தூரதிருஷ்டி யில்லாததால் அரசாங்கத்தின் நெல்களஞ்சியம் முழுவதும் ஒழிந்தது. அவர் புகழை விரும்பி உணவுக் களஞ்சியத்தைத் திறந்து விட்டார். பசித்த மக்கள் கொள்ளை யடித்தார்கள். களஞ்சியத்திற்குப் பெரிய அழிவு உண்டாயிற்று.'

கடிதம் கிடைத்ததும் அரசனின் கண்கள் சிவந்தன. அவர் வெகுளியால் உதைக்கப்பட்டு உன்மத்தன் போலாயினர். உடனே இவ்வாணையை வெளியிட்டனர்:- 'படைத்தலைவனே ஆயிரம் படை வீரர்களுடன் மங்கள வாட்டியாவிற்குச் சென்று தாமாஜியை விரைவில் கைதுசெய்து இங்கே கொண்டு வருக!' அவ்வளவே, ஆணையின் தாமதம்தான். ஒரு துளுக்கப் படைத்தலைவன் பெரும் படையுடன் மங்கள வாட்டியாவை யடைந்து அந்த ஸூபேதார் வீட்டிற்குச் சென்றான். அப்பொழுது தாமாஜி, எல்லா வுலகிற்கும் ஈசனாகிய பாண்டுரங்கன் வழிபாட்டில் ஈடுபட்டிருந்தார். வெளியிலிருந்து அவருக்குப் படைத்தலைவன் வரவுதெரிவிக்கப்பட்டது. ஆனால், அவர் சிறந்த பேரன்புகொண்டு இறைவனடியைச் சிந்திப்பதினால் அசைவற்றிருந்தார். அவர் பிறருடைய போக்குவரவைக் கடுகளவும் பொருட்படுத்தவில்லை.

ஆண்டவனடியைத் தியானிப்பதாலும், பூஜிப்ப தாலும் உண்டாகும் பேரின்பத்தின் முன்னிலையில் என்ன அச்சம்? என்ன கவலை? என்ன சிந்தை? இங்கு தாமதத்தைக்கண்ட படைத்தலைவன் வீட்டிற் குள் நுழைந்து தாமாஜியை அதட்டிக் கூப்பிடத் தொடங்கினன். தாமாஜியின் மனையறக் கிழத்தி முன்வந்து அச்சமின்றிப் பதிலளித்தாள். 'அவர் இப்பொழுது பூஜையி லிருக்கிருர். சற்று நேரத் திற்குப் பிறகுதான் தங்களைச் சந்திப்பார்'. அதி காரச் செறுக்குற்ற படைத்தலைவன் கர்ஜித்தான். 'நான் பூஜையைப் பொருட்படுத்த மாட்டேன். இப் பொழுதே சந்திப்பேன். சொல், அவன் எங்கிருக் கின்ருன்?' இறைவனைக் குறித்துச் சொல்லப்பட்ட பழிச்சொல் அவ்வம்மையாரின் பொறுமையின் எல்லை யில் நிற்கவில்லை. அவர் துடிப்புற்ற குரலில் கூறினர்:- 'சும்மா இருங்கள். படபடக்கத் தேவையில்லை. எது வரையில் அவருடைய நித்யகர்மம் முறைப்படி முடிய வில்லையோ அதுவரையில் எவ்வளவு முயற்சிப்பினும், நான் ஒருவனையும் அவரது பக்கத்தில் செல்லவிட மாட்டேன். எங்களைப் பொறுத்தவரையில் இறை வன் வழிபாட்டிற்கு நிகராக வேறென்றுமில்லை.' பதிவிரதையின் சொல் தன் வேலையைச் செய்து முடித்தது. படைத் தலைவனுடைய ஆற்றல், அதி காரம் அனைத்தும் சிறிது குன்றின. அவனுடைய முகத்தோற்றம் பொலிவிழந்தது. அவன் மெலிந்த குரலில் கூறலானன்:- நல்லது தாங்கள் அவரை இங்கே வரும்படி தெரிவிப்பீராக.

பக்தியுடைய அவ்வம்மையார் இச்செய்தியை நாயகனிடம் தெரிவிக்கச் சென்றனர். அப்பொழுது

திரு. தாமாஜி பகவானுடைய தியானத்தி லமர்ந் திருந்தார். சிறிது நேரத்தில் பூஜைமுடிந்தது. கற்பரசி ஐயப்படாமல் எல்லாச் செய்திகளையும் தெரிவித்தார். படை உடனடியாக வந்தது, நெல் களஞ்சியத் தைத் திறந்து விட்டமையினாலே தானென தாமாஜி நிச்சயித்துக் கொண்டார். ஆனால், தன்னிலையினின் றும் சிறிதும் அசைவுறாமல் மனைவியிடம் கூறினார்.— 'நாம் கவலைப் பட வேண்டுவதில்லை. பகவானுடைய ஒவ்வொரு செயலும் அருள் நிறைந்த தாகவேயிருக் கும். அதில், தொடக்கத்திலும் இடையிலும் கடை யிலும் உலக நன்மையின் விருப்பம் நிலை பெற்றிருக் கும். என்ன, நாம் அரசனுக் கஞ்சியும், கைதியாவதற் கஞ்சியும், உதவி யற்ற நம் குடிகளின் மரண துக்கத் தில் துணைசெய்யாமல் விடுவதா? நமது கடமையைக் காப்பாற்றுவதி னின்றும் பின் வாங்குவதா? நாம் நமது கடமையைக் காப்பாற்றினோம். பகவான் பாண்டுரங்கனுடைய அருளைப் பெறும் பொருட்டு முயற்சித்தோம். இப்பொழுது அரசன் வேண்டு மானால், மிகக் கடினமான தண்டனையைத் தரட்டும். அதைப் பற்றி யொரு கவலையுமில்லை. மிக மகிழ்ச்சியே.'

இவ்வாறு கூறிப் புன் சிரிப்புடன் வெளி வந்தார். படைத் தலைவன் யாராலேயோ ஏவப் பட்டவன் போல அசையாது அங்கு அமர்ந்திருந்தான். ஒளி பொருந்தியதும், சாந்தம் கமழுவதும், இனிமை யுடையதுமான தாமாஜியின் முகமண்டலத்தைக் கண்டு, சேனாபதியினுடைய வெகுளி முற்றும் மாறி விட்டது. அவன் மிகுந்த வணக்கத்துடன் சொல்லத் தொடங்கினான்:— 'அரசர் தங்கள் பொருட்டு

இவ்வாணையை யனுப்பினர். அன்றியும், தங்களை விரைவில் அழைத்து வரும்படி எனக்கும் கட்டளை யிட்டனர்.'

பக்தராகிய தாமாஜி மகிழ்ச்சியுடன் பதிலளித்தார்- 'நான் தங்களுடன் வருவதற்கு சித்தமாயிருக்கிறேன். ஒரு தடவை மட்டும் உள்ளே சென்று என் மனைவியிடம் விடைபெற்று வருவதற்கு உத்தரவு கொடுங்கள்.' படைத்தலைவனின் அனுமதி பெற்று அவர் வீட்டிற்குள் சென்றார். தன் மனைவியினிடத்தில் தான் கைதி செய்யப்பட்ட செய்தியைச் சொல்லி அனுமதி கேட்டார். அன்புருவான அவ்வம்மையார் இச்செய்தியைக் கேட்டு வருந்தவில்லை. இதுவும் பண்டரிநாதன் செயலென்று கருதி மகிழ்ந்தார். அவர் நாயகனுடைய திருவடியில் வணங்கிச் சொல்லத் தொடங்கினர்- 'நாதா பகவான் பண்டரிநாதன் ஏதாவது செய்வாரானல் அது நமது நன்மையின் பொருட்டேயாகும். கடவுளருளால் தங்களுக்கு ஏகாந்தமா யிருந்து இறைவனை வழிபடும் சமயம் அமையும். தங்கள் கடமையை நிறைவேற்ற நல்ல சமயம் வாய்த்தது. நான், இது நமக்கு நற்பொழுதென்று என்னுகின்றேன். ஆனல், இவ்வடியாள் தங்கள் பணியினின்றும் ஏமாற்றம் அடைவேன் என்னும் ஒரு கவலை மட்டும் தான்.' தாமாஜி தமது மனைவியின் பொறுமையையும், பகவானிடத்திலுள்ள நம்பிக்கையையும் உள்ளத்தால் புகழ்ந்து அன்புடன் விடைபெற்றுக் கொண்டார்.

வெளிவந்ததும் பக்தனுடைய இரு கைகளும் விலங்கிடப்பட்டன. ஒவ்வொரு கணத்திலும் தான் வழிபடும் கடவுளைத் தியானிக்கும் பக்தனுக்கு

இரும்பு விலங்கினால் அரும்பும் துன்பமேது? கை விலங்கின் ஒலியுடன் நாம கீர்த்தனத்தின் ஒலியையும் கலந்தொலிக்கச் செய்துகொண்டு தாமாஜி சேனாபதியுடன் சென்றுகொண்டிருந்தார். கோவலகுண்டாவிற்குச் செல்லும் வழியில்தான் பண்டரிபுரம் இருக்கின்றது. பாண்டுரங்கனைத் தரிசித்துப் புனிதமுற்றுச் செல்லலாமென்று பக்தனுக்கெண்ண முண்டாயிற்று. படைத்தலைவனுடைய விடைபெற்று, கோவிலினுட் புகுந்தார். இதயப்பொய்கையில் இன்ப அலைகள் எழுந்து குலுங்கின. உடலில் மயிர் சிலிர்த்தது. விழிகளினின்றும் ஆனந்தக் கண்ணீர் தாரை தாரையாக வழிந்தது. கோவிலுள் நுழைந்ததும் அவர்க்கு ஓராவேச முண்டாயிற்று. அவர் அன்பிலே மூழ்கிய மையால் தன்னுடலையும் மறந்தார். சிறிது நேரத்தில் ஒரு வகையாக மனதைத் திருத்திக்கொண்டு பகவானுடைய திருமுன் தமது எண்ணமாகிய மலரைக் காணிக்கையாக சமர்ப்பித்தார். "எனது வாழ்க்கைப் பொருளே! இந்த அடிமையை இக்கோலத்துடன் பார்க்க விரும்பினீர்! நான் தேவரீர் விருப்பத்திற்கு இலக்கானவனே. தேவரீருடைய மகிழ்ச்சியில் யானும் மகிழ்ச்சி யுடையவனே ஆண்டவனே! நீதிகெட்ட அரசனின் அன்னத்தை அருந்தியதற்கு, இதோ தக்க பயனை அளித்துவிட்டீர். நான் இதைத் தீமையாக ஏன் எண்ணவேண்டும்? அருட்கடலே! இந்த எளியேனைத் தேவரீருடைய திருப்பணியிலீடுபடுத்த - பிறவித் துன்பத்தையழிக்கும் தேவரீருடைய திருநாமோச்சாரணம் செய்ய இவ்வளவு அழகான சமயம் எங்கே கிடைக்கும். ஓ பிரபுவே! அரசாங்கப் பணியிலுள்ள மோகத்தை விட்டுவிடுவது

என்னைப் பொறுத்த வரையில் முடியாததாக விருந்தது. தேவரீர் இவ் விருத்தாப்பியத்தில் அச்சத்திற் கிடமில்லாத தேவரீருடைய திருவடியில் அழைத்துக்கொண்டது பேருபகாரமே. நான் இப் பேருபகாரத்தை எச்சொல்லா லெடுத்துப் புகழ் வேன்! எந்த அரசன் வாயிலாக இவ்வருளை அனுப்பி வைத்திரோ நான் அவ்வரசனைக் குறித்து எவ்வுரை களால் என் நன்றியை வெளிபடுத்துவேன்!" இவ்வளவுஞ் சொல்ல அவர் கண்களி னின்றும் நீர் தாரையாக வழிந்தோடி அவரை மேலுஞ் சொல்ல விடவில்லை. குரலும் மிக தழு தழுத்தது. படைத் தலைவன் நேரமான படியால் துடிப்புடன் கூப்பிட லானுன். 'பாவம்' படைத் தலைவனுக்கு அரசனுல் தண்டனையுண்டாகக் கூடாதென் றெண்ணி, அவர் விரைவில் கோவிலைவிட்டு வெளிவந்தார். ஆண்டவ னுடைய ஜகத்தை மயக்கும் திருவுருவத்தைத் தியானித்துக்கொண்டு தாமாஜி சேனுபதியுடன் சென்றுகொண் டிருந்தார்.

* * *

உச்சிப்பொழுது கோவலகுண்டா அரசன் சிம்மா சனத்தில் வீற்றிருந்து, சேனுபதி விலங்கிட்டு அழைத்துக்கொண்டு வரும் தாமாஜியின் வரவை எதிர்பார்த்துக்கொண் டிருந்தான். எவ்வளவுக்கெவ் வளவு நேரம் நீண்டுகொண்டு போகிறதோ அவ் வளவுக் கவ்வளவு அவனது பொறுமை குறைவதுடன் வெகுளி வளர்ந்து கொண்டிருந்தது. இதற்குள் ஒரு நாட்டுப்புரத்தான் கருத்த வுடலினன். ஆயினும், நல்ல தேஜஸ்ஸுடைய சிறுவன் கோவணத்துடன் அரச சபைக்கு வந்தான். அவனுடைய சிறு பருவத்-

தையும் கரு நிறத்தின் அழகையும் பார்த்து அச்சபை யோர்கள் மந்திரத்தால் மயங்கியவர் போலானார்கள். அவன் தோளில் ஒரு கருத்த கம்பிளியும், கையில் ஒரு சிறியகோலும் வைத்திருந்தான். அவன் அச்சமின்றி அரசன் முன்னிலையில் வந்து எட்டத்தினின்றே குனிந்து வணக்கத்துடன் சொல்லத்தொடங்கினான் – 'மஹாராஜா கும்பிடுறேனுங்க. அடிமை எஜமான் தாமாஜி இருக்காங்களே அவுங்கவூரிலேருந்து வரே னுங்க –' தாமாஜியின் பெயரைக் கேட்டதும் அரசன் புருவம் வில்போல் வளைந்தது. கோபத்தால் கண் களில் பொறிபறக்க, அவனைப்பார்த்து அதட்டிக் கேட்டார் – 'என்னடா உன் பெயர்?'

"ஆண்டே! அடியேன் பேரு பிட்டு"ங்க. பிட்டு மீண்டும் கூறினான் "அடியேன் திருத்தாமாஜியின் கஞ்சித்தண்ணிகுடிச்சு வளந்த பறப்பயலுங்க."

"இங்கு ஏன் வந்தாய்?" அரசன் கேட்டான்.

'மன்னிக்கணுங்க.' பிட்டு மேலும் கூறினான் – "பஞ்சகாலத்திலே விசுவாசமுள்ள குடிகள் வயித்துக் குக் கஞ்சி யில்லாமலே சாவதெப் பார்த்து, எங்க எஜமான் உங்க பண்டாரத்தெத் தெறந்து விட்டுட் டாருங்க. அந்த தானியத்தின் விலெ பூராவும் கொண்டு வந்திருக்கேனுங்க. நீங்க தயவுசெய்து அதே யேத்துக் கிட்டு பண்டாரத்தில் போட்டு ஒரு சீட்டுக் குடுத் துடுங்க." இதைக் கேட்டதும், அரசன் எல்லையற்ற வியப்புற்றான். என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தான். தான் செய்த செய்கை சிறுமை யுடையது என்று நினைத்து நினைத்து இரங்கினான். தன்னைத்தானே இழிவாகக் கருதினான்:– "ஓ! நான் தாமாஜியைப் போன்ற உண்மையான சேவகனை

ஆராய்ச்சி இன்றி அவமானப் படுத்திவிட்டேன். அவரை விலங்கிட்டுக்கொண்டு வரும் பொருட்டு இவ்வளவு பெரிய படையை அனுப்பினேனே!" பச்சாத்தாபத்துடன் பிட்டுவினுடைய மோஹன வடிவத்தைக் காணக்கான நெஞ்சத்தில் ஒரு ஆசையும் சந்தோஷமும் பொங்கின. அவர் மலர்ந்த விழிகளுடன் ஆவலோடு 'அப்பா பணம் எங்கே' என்றார். கட்கத்திலிருந்த ஒரு சிறு பையை எடுத்தவிழ்த்துக்கொண்டு பிட்டுப்பறையன் சொன்னான்: 'இந்தாங்க எசமான் இதைப் பதிவுசெய்து சீக்கிரம் சீட்டுக் கொடுத்து அனுப்புங்க. எனக்குப் போக நேரமாகுதுங்க' அரசன் பிட்டுவினுடைய முக மண்டலத்தைப் பார்த்து மயங்கிப்போயிருந்தான். நிலைடைந்த அவன் கண்கள் அப்பறையனின் அழகமுதைப் பருகிக்கொண்டிருந்தன. 'பிட்டு இங்கேயே இருந்து ஒப்பற்றதும், பெறுவதற் கரியதுமான அழகின் பொலிவை என் விழிகள் பருகவும் செய்யின் நான் பேறு பெற்றவனாவேன்' என்றெண்ணினான். பிட்டுவோ, தன்னை விரைவில் அனுப்பிவிட வேண்டுமெனத் துடிக்கின்றான். அரசனோ, அவன் தன்னை விட்டு விலகுவதில் வருத்தம் அடைகிறான். அரசன் தன் மனதைத் திடம் செய்துகொண்டு 'நல்லது பிரியமுள்ள பிட்டு! இந்தப் பணத்தை பொக்கிஷத்தில் கொடுத்துவிட்டு மீண்டும் என்னைப் பார்த்துவிட்டுப் போகவேண்டும்' என்றான்.

பிட்டு பொக்கிஷத்தை யடைந்தான். அவன் பொக்கிஷதாரியிடம் தனது பணப் பையை அர்ப்பித்தான். பொக்கிஷதார் கண்களால் அவனைப் பார்ப்பதும், கைகளால் பணத்தை எண்ணுவதுமா யிருந்

தான். இது என்ன ஆச்சரியம், பையில் நின்றும் பணம் எடுக்க எடுக்க நிறைந்துகொண்டே யிருந்தது. பொக்கிஷதாரன் இறும்பூதக்கடலில் ஆழ்ந்துவிட்டான். ஒன்று வியக்கத்தக்க திருவிளையாடல், மற்றொன்று ஒப்பற்ற அழகின் பொலிவு. பாவம் அவன் பரபரப் புற்முன். மிகவும் முயற்சித்துப் பிட்டுவினிடமிருந்து தன்னை விடுவித்துக்கொண்டான். முடிவில், பணம் பெற்றதற்குச் சிட்டு வாங்கி அந்த அடியார்க் கெளிய பறையன், தன் காக்ஷிக்காக காத்திருக்கும் காவலன் முன்னடைந்தான்.

அவன் வந்ததும் அரசன் கேட்டான்: 'பிட்டு! என்ன, உனக்கு சிட்டுக் கிடைத்ததா?' 'எஜமான் கிடைத்தது. இப்ப எனக்கு உத்தரவு கொடுங்க வீட்டுக்கு வழிதேடணுங்க, ரெம்ப நேரமாச்சுங்க எங்க எஜமான் கவலையோடிருப்பாங்க.' அரசன் சிட்டில் தன் கைச்சாத்தும், அரசாங்க முத்திரையுமிட்டு பிட்டுவினிடம் அளித்தான். திவானைக் கூப்பிட்டு, தாயாஜியை மிக மரியாதையுடன் அழைத்து வரும்படி உத்தரவிட்டான். ஆனல், பிட்டுவைப் போகும்படி கட்டளையிட அரசனுக்கு ஆற்றல் எழவில்லை. இரவும் பகலும், இப்பறையன் பணிவிடையின் பொருட்டு தன்னை விற்றுவிடவும், அவருள்ளத்தில் தோன்றிற்று. அத்திருவிளையாட்டுக் கூத்தன், விரைவில் அங்கிருந்து செல்லலானுன்.

*　　*　　*

திரு தாமாஜி பண்டரிபுரத்திலிருந்து வெகு தொலையில் வந்துவிட்டார். ஒருநாள் விடியற் காலத்தில் அவர் ஸ்நானம் முதலியவைகளை முடித்துக்கொண்டு, ஓர் தனியிடத்தில் பூஜைக்காக அமர்ந்

தார். பாராயணத்தின் பொருட்டு தமது ஏகப் பொரு ளான கீதா புஸ்தகத்தைக் கையிலெடுத்தார். புஸ்தகத் தின் ஏடுகளைத் திருப்பிப் பார்க்கும்போது ஜொலித் துக்கொண்டு இருக்கிற அழகிய ஒரு தாள் காணப் பட்டது. அவர் அதை வேட்கையுடன் விரித்துப் படிக்கத்தொடங்கினார். அதில், 'நமது களஞ்சியத்தி லுள்ள தானிய விலை முழுவதும் பெற்றுக்கொள்ளப் பட்டது' என்று, பொன்னெழுத்துக்களால் எழுதப் பட்டிருந்தது. அதில் அரசனது சொந்தக்கையெழுத்து இருப்பதைக் கண்டு, பக்தருக்கு எல்லையற்ற ஆச்சரிய முண்டாயிற்று. இவ்வளவு பெருந்தொகை யாரால் எப்படிக் கொடுக்கப்பட்டது? இவ்விஷயம் அவருக்கு விளங்கவே யில்லை. ஆனல், பூசை செய்யும் அவாவி னுல் இந்த இரகசியத்தைத் தெரிந்துகொள்ள முயற் சித்தாரில்லை. அந்தத் தாளை, முன்னிருந்ததுபோல வைத்துவிட்டுப் பூஜையில் நிலை பெற்றுர். அரசனுல் அனுப்பப்பட்ட தூதன், திருமுகத்துடன் சேனு பதியை யடைந்தான். தாமாஜியின் விடுதலைச் செய் தியை யறிந்ததும், சேனுபதி அவருடைய விலங்குகளை நீக்கி அன்புடன் மீண்டும் மீண்டும் நமஸ்கரித்தான். அவரை, இராஜாங்க உடைகளை யுடுக்கச் செய்து படையுடன் நகரம் நோக்கிச் செல்லச் செய்தனன்.

* * *

பிட்டுப் பறையன் போன பிறகு, அரசன் பெருங் கவலையினுல் ஊணுறக்கத்தையும் விட்டுவிட்டான். அவன், பறையனுடைய பிரிவினுலே வலியிழந்து பித் தன் போலாயினன். பிட்டு, பிட்டு, என்னும் கூப்பாட் டினுல் அரண்மனை முழுதும் குதூகலம் நிரம்பியது. அரசன் தன் மனதைக் கொள்ளைகொண்ட பிட்டு

வைத் தேடக் கட்டளையிட்டான். 'பிட்டுவை யடைவது அவ்வளவு எளிதா' அவன் இதற்குள் எங்கேயோ சென்றிருப்பான். எனினும், அரசன் ஆணையை மேற்கொண்டு அவனைத்தேடக் குதிரை வீரர்கள் புறப்பட்டனர். அவனுடைய தகவல் ஒன்றும் தெரியவில்லை என்பதைக் கேட்ட அரசன் 'பிட்டு எங்கே, பிட்டு எங்கே' என்று கூவிக்கொண்டு அரண்மனையைவிட்டு வெளிக்கிளம்பினான். மக்களுடைய பரபரப்பை ஒன்றும் பொருட்படுத்தாமல் அரசன் சிறிது தூரம் செல்லவும், வந்துகொண்டிருக்கும் திரு தாமாஜியைப் பார்த்தான். அரசன் விரைவாக ஓடிச் சென்று, தாமாஜியை அன்புடன் மார்போடணைத்துத் தழுதழுத்த குரலில் கூறினார்: 'தாமாஜி! சொல்லுங்கள் இந்தப் பாவிக்குக் கூறுங்கள். பிட்டு எங்கே இருக்கிறான். என்னை ஒருதரம் அவனுடைய அழகிய வதனத்தைக் கண்குளிரக்கண்டு களிக்கவிடுங்கள். போதும், தாமாஜி காலம் கடத்தாதீர்கள். என்னுயிர் போய்க்கொண் டிருக்கிறது!' தாமாஜி வியப்புடன் கேட்டார்: 'வேந்தே! பிட்டு யார்? எனக்கும் அவனுக்கும் என்ன தொடர்பு?' 'அவன்தான் உங்களூழியப் பறையன்.' அரசன் தொடர்ந்தார் - 'அவனிடம்தானே தாங்கள் களஞ்சிய தானியவிலையைக் கொடுத்தனுப்பினீர்கள். அந்த கம்பிளியையும் கோவணத்தையும் அணிந்துகொண்டிருந்தவன் தங்கள் ஊழியன் தானே? ஏது எல்லாம் தெரிந்திருந்தும் தெரியாதவர்போல் நடிக்கின்றீரே. இந்நீசனைத் தங்களருளால் கிருதார்த்தனாக்க மாட்டீர்களோ?'

இப்பொழுது தாமாஜி எல்லா ரஹஸ்யத்தையும் அறிந்துகொண்டார். அவர் கண்களில் நீர்ததும்பியது.

திருமேனியில் மயிர் சிலிர்த்தது. நாத் தழுதழுத்தது. இவ்வாறு பேரன்பினால் மெய்மறந்த நிலைமையில் உரத்த குரலில் பகவானைத் துதிக்கத் தொடங்கினார்: 'ராம! ராம! உலகத்தைக் காப்பாற்ற எழுந்தருளியிருக்கும் விட்டல்நாதருக்கு இன்று என் பொருட்டுப் பறையன் கோலங்கொள்ள நேர்ந்தது. கோவலகுண்டாவின் அரசன் தன்யனே. நான்தான் அவரிடம் தவறு செய்தேன். தானியத்தைக் கொள்ளையடிக்கச் செய்து பெருங் கெடுதியை விளைவித்தேன். ஆனால், என் பொருட்டு அறுவகைச் செல்வம் பொருந்திய என் பெருமானுக்கு தனது ஈசுவரத் தன்மையை மறந்து எத்தகைய இழிகோலங் கொள்ள நேர்ந்தது. பழஞ்செருப்பைத் தன் காலில் போட்டுக்கொண்டார். பழங்கோவணத்தைக் கட்டினார். ஓலைத்தொப்பியைத் தலையில் மாட்டினார். ஒரு கறுத்த கம்பிளியைத் தோளில் போட்டார். கையில் ஒரு கோலைத் தாங்கினார். வாயினால் 'ஆண்டே! ஆண்டே' என மொழிந்தார். ஆண்டவனே! எம் பெருமானே! தேவரீர் என்ன காரியம் செய்துவிட்டீர். ஓ மாதவனே! இந்த எளியேன் பொருட்டுப் பறையன் தொழிலை ஏற்றுக்கொண்டீரே. யான் இத் தவறால் வெந்து நீறுகிறேன். நாதனே! யான் எந்த அரசனின் தானியத்தைக் கொள்ளையிடச் செய்தேனோ அவ்வரசன் என்னுயிரை வாங்குவதைவிட வேறு என்ன செய்வான்? அவ்வாறிருக்க, குணநிதியான இறைவனே! தேவரீர் இத்தகைய கஷ்டத்துக்கு ஏன் ஆளானீர்?

இவ்வளவும் கூறி, அன்பினால் உன்மத்தராய்த் தாமாஜி 'பாண்டுரங்கா பாண்டுரங்கா' எனக் கூவினார்.

அருளே வடிவமாகிய இறைவன் அரசனுக்கும் நாமாஜிக்கும் தம் தெய்வத் திருக்கோலத்தைக் காட்டியருளினர். அடியார்க்கெளிய எம்பெருமானே தேவரீரின் திருவருள் இருந்தவா றென்னே.

‘ ஆண்டவனும் அவனடிமையும் வாழ்க !

பாதியா யழுகிய கால்கைய ரேனும்
பழிதொழிலும் இழிகுலமும் படைத்தா ரேனும்
ஆதியா ! அரவணையா ! என்பா ராகில்
அவரன்றே யாம்வணங்கும் அடிகளாவார்
சாதியால் ஒழுக்கத்தால் மிக்கோ ரேனும்
சதுர்மறையால் வேள்வியால் தக்கோரேனும்
போதில்நான் முகன்பணியப் பள்ளிகொள்வான்
பொன்னரங்கம் போற்றாதார் புலையர்தாமே.

# மணிதாஸன்

ஜெகந்நாதபுரியில் மணிதாஸன் என்னும் ஒரு தோப்புக்காரன் இருந்தான். மலர்களையும் மாலைகளையும் விற்று, அவன் இல்வாழ்க்கை நடத்தி வந்தான். உலக திருஷ்டியில் கல்வி பயிலாதவனு யிருந்தபோதிலும், தாஸன் உண்மையில் படித்தவனுகவேயிருந்தான். எதார்த்தமாகப் படித்தவர்களுக்கு இரண்டு இலக்கணங்கள் காணப்படும். ஒன்று துன்பத்தால் வருந்துபவர்களிடத்தில் இரக்கம்; மற்ருென்று பாவச் செயல்களைவிட்டு இறைவனை வணங்குதல். தீவினைகளைவிட்டு எவன் கடவுளைச் சிந்திக்கின்ருனே அவன்ருன் இறைவனின் திருநோக்கில் பெரியவன். அவ்வாறே எல்லாப் பிராணிகளும் இறைவன் வடிவமென் றெண்ணிப் பயன் கருதாது எல்லோருக்கும் பணிவிடை செய்வது தன் கடமையெனக் கருதுகிறவன் எவனே, அவன்தான் உலக நோக்கில் ஏழையாயினும், விலக்கப்பட்டவனுயினும், தாழ்த்தப்பட்டவனுயினும் இறைவன் திருநோக்கில் பெரியவன்.

மணிதாஸன் தனது சிறு வருமானத்தில் பெரும்பாலும் ஏழைகளுக்குதவி, மிஞ்சியதைத் தனது குடும்ப வாழ்க்கைக்கு ஈடுபடுத்தி வந்தான். அத்துடன் தனது உடல் உயிர் அனைத்தும் இறைவன் வழிபாட்டில் அர்ப்பித்தும் வந்தான். இக் காரணத்தினுல் அவன் எந்த நிலைமையிலும் இன்பமே கண்டான், தனது

எல்லா உடமையையும் இறைவனடியில் அர்ப்பணம் செய்தவன் இன்பத்தை நுகரா திருப்பானாயின் வேறெவன்தான் நுகர்வான்?

ஆதித்தன் பன்முறை உதித்து மறைந்தான். இதற்குள் மணிதாஸனுடைய மனைவி மக்கள் ஒவ்வொருவராக மறைந்து முடிந்தனர். தாஸன் இதை ஒரு பெரிய ஆபத்தாகக் கருதினானில்லை. இதுவும் திருவருளென் றெண்ணி இறைவனிடத்தில் மனமார நன்றி செலுத்தினான். "அருள்வடிவனான இறைவன் பெருந் திருவருளைக் காட்டினார். என் சுமை முழுவதும் இறக்கிவிட்டார். மனைவி மக்களை எனதென்றெண்ணி மனம் அவர்களிடம் பற்றுக்கொண்டிருந்தது. எம்பெருமான் என் னலத்திற்காகத் தம் பொருளைத் தாமாகவே ஏற்றுக்கொண்டார். ஓ! உடையவனே தேவரீருடைய திருவருளுக்கு நமஸ்காரம். என்னை இவ்வுலகக் குழப்பத்தி னின்றும் விடுவித்தீர். இன்றையதினம் வரையிலும் விஷயத்திற்கு அடிமையானேன். மோகமென்னுங் கள்ளின் களிப்பால் பேரன்பு வடிவரான அருட்கடலை மறந்தேன். இன்று தேவரீரின் அளவற்ற அருளினால் செய்யுங் கடமை இதுவென் றறிந்தேன். ஓ பிரபுவே இனி எனது வாணாள் முழுவதும் தேவரீரின் திருப்பணியிலும், பண்பு பல பாராட்டுவதிலும் கழிக்க ஆசி அருள்வீராக."

என்ன சிறந்த எண்ணம்! ஆணாயினும், பெண்ணாயினும் சரி; உலக இன்பங்களை - மனைவி, கணவன், புதல்வன், புதல்வி, பொருள், புகழ், பெருமை, வாழ்க்கை, இறப்பு முதலியவற்றைப் பெறும்பொழுது அப்பொருள்கள் அனைத்தும் கடவுள் உடைமையென்

றெண்ணவேண்டும். அவற்றில் நான் எனது என்னும் செருக்கின்றி, பொறுப்பும், கடமையும் கொண்ட அடிமையைப் போன்று தனக்கென்பது இல்லாமல் நடந்துகொள்ளவேண்டும். அவையனைத்தும் தன்னை விட்டு விலகின பிறகும் கடவுளுடைமை கடவுளை யடைந்தன; இனி, கடவுள் நம் பொருட்டு எந்தக் கட்டளையிடுவரோ அதை மேற்கொள்வதே நம் கடமையெனக் கருதிப் பெருமகிழ்ச்சியுடன் இறைவ னடியை வணங்கித் தனது கடமையையும் காப்பாற்ற வேண்டும். அப்படிப்பட்ட ஆண்மகனும் பெண் மகளும் தான் பக்தர்களெனச் சொல்லத்தக்கவர். எவர் உலக சுகங்களை யடையும்பொழுது இறை வனைப் புகழ்வதும் துக்கங்கள் நேரும்பொழுது அவனை யிகழுவதுமாக இருக்கின்றனரோ அவர் உண்மை யன்புடையவரல்லர். ஏனெனில், அவ ருடைய நோக்கில் இறைவனடியையவிட உலக இன் பந்தான் மேலானது.

மணிதாஸ், பிரபுவின் விருப்பமே யென்றெண்ணி தன்னுள்ளத்தை இறைவன் சிந்தனையில் இணைத் தான்.

உலகப் பொருள் அனைத்தையும் சாரமற்றதென, அனைத்திற்கும் மேலான ஹரியின் திருவடியை அடைக்கலமாகக் கொண்டான். ஆமாம். மணிதாஸ் இப்பொழுது முற்றத்துறந்த முனிவர் வேடத்தில் காணப்பட்டான். வைகறைப்பொழுதிலே நீராடல் முதலிய கடன்களை முடித்துக்கொண்டு இறைவனைத் தியானித்துக்கொண்டு கையில் ஒரு தாளமெடுத்துக் கொண்டு ஜெகனாதத்தில் திருக்கோயிலின் கோபுர வாயில் முன் நின்று பேரன்புடன் ஹரிநாமத்தைப்

பஜனை செய்வான். அடிக்கடி கீர்த்தனை லஹரியினால் கூத்தாடுவான்.

கோபுரம் திறக்கப்பட்டதும் உள்ளே சென்று பதிதபாவனான திரு ஜெகனாதப் பெருமான் சன்னதியிலுள்ள கெருடஸ்தம்பத்தின் பின்னின்று உள்ளங் குளிர அப்பெருமானைக் கண்டு பலதரம் சாஷ்டாங்க நமஸ்காரம் புரிந்து, மிக இரக்கக் குரலில் துதிக்கலானான். "ஓ எளியார் தம்பெருமானே தேவரீரின் திருவருளை யான் என் சொல்வேன். நாதனே இவ்வாறு தேவரீர் மதிவதனத்தைப் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே என்னுயிர் உடலைவிட்டு நீங்குமானால் அதுவே போதும். தேவரீர் என்னுயிர்க்குயிராய் இருக்கின்றீர். என்போன்ற மூடர்களுக்குத் தேவரீருடைய திருவடியன்றி வேறொன்றில்லை. துணையற்ற எனக்குத் தேவரீரே துணை." இதன் பிறகு, சொல் மலர்மாலை சூட்டத் தொடங்குகிறான். கீர்த்தனத்தின் சுவையில் தன்னையும் மறந்து ஆடிக்கொண்டே அழிலேயே மூழ்கின நிலைமையில் சில பொழுது பாடுகிறான்.

ஜெகனாதைப் பெருமான் பக்கத்திலுள்ள சந்தனக் கல் வரையில் செல்வான். மறுபடி கெருட ஸ்தம்பம் வரை திரும்ப வருவான். அச்சமயத்தில், அவனுடலில் எட்டுவித மெய்ப்பாடுகளும் உதயமாகும். ஒருகால் அழுவான்; ஒருகால் சிரிப்பான்; ஒருகால் வாளா இருப்பான்; ஒருகால் ஓங்கிய குரலில் பாடுவான்; ஒருகால் ஸ்தோத்திரம் செய்வான்; ஒருகால் நமஸ்கரிப்பான்; ஒரு கால் பல்லாண்டு கூறுவான்; ஒருகால் இறைவனைக் குறித்து வேண்டுவான்; இவ்வாறு செய்துகொண்டிருக்கையில் மணிதாஸ் உன்மத்த

னைப்போல் நர்த்தனம் செய்தான். கீர்த்தனைத் தொனியும் தாள ஒலியும் கலந்து கோவில் முழுதும் ஒரே முழக்கமாயிற்று. இவ்வாறு நாள் தோறும் மணிதாஸன் ஜெகனாதப் பெருமானுடைய மகா சந்நிதானத்திலே ஆடியும் பாடியும் ஆனந்த மடைந்தான். எவரேனும் கோவில் பிரசாதத்தை வாங்கி அளிப்பின் உண்பான். இல்லையேல் பசியும் நீர் வேட்கையும் கொண்டு, ஏதாவதொரு சாவடியில் புகுந்து, பிரபுவின் தியானத்தில் மூழ்குவான். இம் முறையாக உடல், பொருள், ஆவி அனைத்தையும் இறைவனடியில் அர்ப்பித்து இன்புற்றான்.

ஜெகனாதப்பெருமான் திருக்கோயிலின் மண்டபத்தின் ஓரிடத்தில் தினமும் புராண படலம் நடப்பதுண்டு. அறிவில் சிறந்த புலவர் ஒருவர் கதையைச் சொல்வார். பல ஆண் மக்களும் பெண் மக்களும் குழுமிக் கேட்பார்கள். கதை கூறும் நாவலர் பெரும் புலவர், விதம் விதமான சுவைகளைத் தோற்றுவித்துக் கதை கூறுகையில், கேட்போர் மயங்கி விடுவார்கள். இவ்வாறு நிகழினும் அப்புலவர் அன்பற்றவரே. அவருடைய உள்ளம் ஈரமற்றது; அதில் அன்பு நீர் சிறிதும் பாயவில்லை. ஒரு நாள் கதை நடந்துகொண்டிருந்தது. அப்பொழுது, ஹரே ராம ஹரே ராம என்று முழக்கிக்கொண்டு மணிதாஸன் அங்கு வந்தான். திரு ஜெகனாதரின் காக்ஷியைக் கண்டு தன் வயமிழந்து ஆடலானான். ஆடியும், பாடியும் கதை கூறும் புலவரின் பக்கத்தில் வந்தான். அப்பொழுது அவனுக்கு எங்கிருக்கிறான், எதைச் செய்கிறான் என்பதுகூடத் தெரியவில்லை. அச்சமும் கண்டஞ்சும் ஸ்ரீ ஹரியின் அடியிணையில்

அவன் சித்தம் பதிந்திருந்தது. கதைப் புலவருக்கு, தாஸன்செய்வது தீயதாகத் தோன்றிற்று. கோபம் பொங்கிற்று. கதையை நிறுத்தி அவனை வாயில் வந்தபடி திட்டினார். ஆனால், அதைக் கேட்பது யார்? கதைப்புலவர் கத்திக்கொண்டே யிருந்தார். தாஸன் தன்னையும் மறந்தாடிக்கொண்டே யிருந்தான். கதைப் புலவரின் கோபமோ எல்லைமீறி யெழுந்தது. அப்பொழுது கதைகேட்டுக்கொண்டிருந்தவர்களும் வசைச் சொற்களுடன் மணிதாஸனைப் புடைக்கத் தொடங்கினர். நீண்டநேரம் வரையில் இக்கொடுஞ்செயல் நடந்தது. முடிவில் வெளித்தோற்றமுண்டானதும் மணிதாஸன் சற்று நேரத்திற்குள் எல்லாச் செய்திகளையும் அறிந்துகொண்டான். அவன் மனதில் பிரளயகோபமுண்டாயிற்று. மௌனமாக அங்கிருந்து வெளிச்சென்று சாவடியில் போயிருந்தான். தாஸன் தன் மனதிற்குள் — 'இறைவன் திருமுன் கதை கூறுபவரும் கேட்பவரும் என்னை அடிப்பார்களானால் நான் ஏன் அங்கு செல்லுதல் வேண்டும்? ஆமாம். பிரபு இப்படித்தான் விரும்புகிறார் போலும்' என்றெண்ணினான். கதைப்புலவர் இதைத் தன் வெற்றியாகக் கருதினார். 'பகவான் வித்தையிலில்லை, அன்பின் பெருக்கில் இருப்பவர்' என்பதை அவர் அறிந்திலர். எவனுள்ளத்தில் அன்பு வேரூன்றி யிருக்கின்றதோ அவனே இறைவன் இருப்பிடம்.

* * *

பகல் நீங்கிற்று. ஆதித்தன் அஸ்தமன பருவதத்தை அடைந்தான். அதற்குள் சந்திரன் தன் ஸாம்ராஜ்ய பீடத்திற்கெழுந்தருளினான். செந்தாமரையின்

பொலிவு மங்கிற்று. ஆம்பல் வாவியின் தேன்பிலிற்றும் முகம் மலர்ந்தது. காக்கைக்கூட்டம் மரங்களில் கரந்தது. கூகைக்கூட்டம் வானவெளியில் மகிழ்ச்சியுடன் பறந்துலவிற்று. பூவுலக நிகழ்ச்சியைக் காணத் திறந்த வானவர் விழிகளைப்போல வானத்தில் உடுக்கணங்கள் ஒளிர்ந்தன. இவ்வியற்கை, ஒன்றின் அழிவில்தான் மற்றொன்றின் ஆக்கத்தைக் குறிப்பிடுகின்றது. ஜெகநாதப் பெருமானின் திருக்கோயிலில் அந்திப்பூஜை தொடங்கிற்று. ஆனால், மணிதாஸன் வரவில்லை. இன்று அன்னமென்ன, தண்ணீரும்கூட அருந்தவில்லை. பூஜை முடிந்தது. மடைப்பள்ளி அடைக்கப்பட்டது. எல்லோரும் வெளியில் சென்ற பிறகு கோபுரவாயிலும் பூட்டியாயிற்று.

அந்நகரத்தின் நரேசன் தன் அரண்மனையில் பள்ளி கொண்டிருந்தான். இருந்தாற்போல் அவ்வரசன் பார்த்தான்; ஜெகநாதக் கடவுள் தானாகக் காக்ஷியளித்துத் தன்னிடம் சொல்லுகிறார்:- 'வேந்தே நீ ஒரு பெரும் மூடன். நீ இதைக்கூட அறியாயா? உனது அரசாங்கத்தில், எனது கோவிலில் என்ன நடக்கின்றது? பேரன்பன் மணிதாஸன் என் கோவிலில் தாளமிட்டுப் பாடியாடி, எனக்கு இன்பூட்டுகிறான். இன்று உன் கதைப் புலவர் அவனை அடித்துப் புடைத்துக் கோவிலி னின்றும் துரத்தி விட்டார். அவன் கீர்த்தன ஒலி என் செவி புகாமையால் இன்று என் மகிழ்ச்சி குன்றியது. என் மணிதாஸ் கோவிலுக்கு வெளியேயுள்ள சாவடியில் பட்டினியும் பசியுமாகப் படுத்திருக்கிறான். உடனே நீயே அங்கு செல். அவனுடைய கீர்த்தனத்திற்கு ஒரு இடையூறும் நேராவண்ணம் இப்பொழுதே

ஏற்பாடு செய். மணிதாஸன் தாளமிட்டுப் பேரானந் தத்தில் மூழ்கி எப்பொழுது என் முன் நர்த்தனம் செய்வானே அப்பொழுதுதான் எனக்கும் ஆனந்தம். பார், இன்றிருந்து ஒரு கதைப் புலவனும் அங்கு பிரசங்கம் செய்யக்கூடாது. கதாப் பிரசங்கத்தைத் திருமகள் சன்னிதியில் ஏற்படுத்திவிடு. எனது சபா மண்டபத்தை என் அன்பர்களுடைய பஜனைக் கீர்த்த னங்களுக் கென்றே விட்டுவிடுக." ஆகா! ஆனந்தக் கடலாகிய எம்பெருமானுடைய கருணையைப் பாருங் கள். பகவான் பக்தர்களுடைய இன்பத்தில் இன்புறு கிறார்.

இங்கு சாவடியில் படுத்திருக்கும் தாஸன் பார்த் தான். அகஸ்மாத்தாகப் பளீரென ஓர் பேரொளி பரவிற்று. அதன் நடுவில் ஜெகனாதர் தோன்றி, தன் தலையில் திருக்கை சாற்றி அன்புடன் கூறினார்:- 'அப்பா மணிதாஸா! நீ ஏன் பட்டினி கிடக்கின்றாய்? நானும் இன்று உபவாஸங் கொண்டேன். எழுந்திரு உடனே சாப்பிடு.' மணிதாஸனுக்கு வெளி யுணர்ச்சி வந்தது; பார்த்தான்; கோவில் திருத்தளிகை தன் முன் இருந்தது. கருணைக்கடலின் திருவருளைக் கண்டு மணிதாஸனின் பிரளயகோபம் மறைந்தது.

அரசன் உறக்கம் நீங்கியதும் சிந்தித்தான். இது என்ன கனவு. உண்மையாகவே ஜெகனாதக் கடவுள் கட்டளையிட்டனரா? அரசன் ஏற்கனவே பெரிய ஆஸ்திகபுத்தியுடையவன். அதனால் நம்பிக்கை யுண்டாயிற்று. அப்பொழுதே தேட முயன்றான். குதிரையை வரவழைத்து அதன்மீதேறி நேராகச் சாவடிக்குச் சென்றான். கோவிலின் முன்னுள்ள சாவடியில் மணிதாஸன் படுத்திருப்பதைக் கண்டான்.

பொழுதும் விடிந்திருந்தது. அரசன் அன்பு ததும்பும் இனிய மொழிகளால் மணிதாஸனுடைய மனதை இழுத்துக்கொண்டான். சாதுக்கள் ஏற்கனவே அரு ளுடையவர்கள். தாஸன் மனம் ஒப்பினன். அரசன் அவனைத் தன்னுடன் அழைத்துச் சபாமண்டபத் திற்குச் சென்று பேராதரவுடன் மணிதாஸனை ஆடை யணிகளால் அலங்கரித்துக்கூறினன்: 'மணிதாஸரே! நீங்கள் தன்யரே! இறையன்பில்லாத அந்த ஜாதி உயர்வு எதற்கு? நீங்களும் உங்கள் தாயும், தந்தையும் பேறு பெற்றவர்கள். இன்று நீங்கள் என் முன்னிலை யில் தாளமிட்டுக்கொண்டு நர்த்தனம் செய்ய வேண்டும். உமது நர்த்தனத்தால் ஜெகனாதருக்கும் மிக இன்பமுண்டாகும். நானும் என் கண்ணாரக் காதாரக் கண்டு கேட்டுக் களிப்புறுவேன்.'

மணிதாஸ் கையில் தாளமெடுத்து பிரேமத்தில் மூழ்கி நர்த்தனஞ்செய்யத் தொடங்கினர். அவர் பேரானந்தத்தில் தன்னையும் மறந்து அடியார்க் கெளி யவன் திருப்புகழ்பாடி அழகாக ஆடினர்.

அரசனாணையால் கதைப் புலவருக்கு அத்தினம் முதல் அங்கு கதைப் பிரசங்கத்தை நிறுத்த நேர்ந் தது. கோவிலுக்குத் தென்மேற்கில் உள்ள திருமகள் கோயிலில் கதைப் பிரசங்கத்திற் கேற்பாடு செய்யப் பட்டது. அது இன்றும் நடைபெறுகின்றது. ஸபா மண்டபம் அன்பர்களுடைய பஜனைக்கிர்த்தனங்களுக் குத் திறந்துவிடப்பட்டது.

பக்த மணிதாஸன் தன்வாழ்நாள் முழுவதும் அச் சபாமண்டபத்திலே பஜனை செய்துகொண்டு அன் பமிருதத்தின் தாரையால் ஆயிரக்கணக்கான ஆண் பெண் மக்களுக்கு அமரபதவி யளித்து, முடிவில் திரு ஜெகனாதப்பெருமான் திருவடிகளில் ஐக்யமானர்.

ஆண்டவனும் அவனடிமையும் வாழ்க!

# ஹம்ஸத்வஜன்

"ஆகா! என்ன பெரும் பாக்கியம்; இன்று இக் காரணத்தை முன்னிட்டுத் திருமேனி கொண்டு காக்ஷி யளிக்கும் சச்சிதானந்த வடிவ பரமாத்மா பார்த்த சாரதியின் மூவுலகங்களையும் மயக்கச் செய்யும் அழகொழுகும் திருக் கோலத்தைக் கண்டு கண்களைப் பயனுறச் செய்வேன். கேள்விப்பட்டேன் அவனழகு அவ்வளவு ஒப்பற்றதாம்; அவனுடைய சரித்திரம் மிக விசித்திரமுடையதாம். இப்பாக்கிய மற்ற கண்களால் அப்பிரபுவின் சுந்தரத் திருவடிகளை இதுவரையிலும் கண்டிலேன். கிழப் பருவம் வந்து விட்டது. இன்று போர்க்களத்தில் அவன் பொற்பாதங்களைப் பார்த்துப்பிறவிப் பயனைப் பெறுவேன்." சம்பகப் புரியின் மன்னவனாகிய ஹம்சத்துவஜன் இவ்வாறு மனப்பான்மை கொண்டு படைத் தலைவனுக்கு ஆணையிட்டான்-'சேனாபதி! இவ்வளவு விருத்தாப்பியத்தை யடைந்தும் இந்நாள் வரையிலும் இக் கண்ணால் கண்ணனைக்கண்டிலேன். நானே அமர்க் களத்திற்கு இதோ வருகின்றேன். எல்லாப்படை வீரர் களையும் போர்க் களத்திற்கு அழைத்து வாருங்கள்.

பாண்டவர்களுடைய அசுவமேதயாகக் குதிரை சம்பகப்புரிக் கருகில் வந்தது. பெருந்திறன் படைத்த அர்ச்சுனன் தெய்வீக ஆயுதங்களுடன் செவ்வியுடைய வனாய், பிரத்தியும்னன் முதலிய போர் வீரர்களுடன் அசுவத்தைக்காக்கும் பொருட்டுப்பின் வந்து கொண்டு இருந்தான். ஹம்சத்துவஜன் தூதர் வாயிலாக இச்

செய்தியைச் செவியுற்று க்ஷத்திரிய அரச தருமத்தின்படி போர் புரிய ஆயத்தமாகி விஜயனுடைய தேர்த்தட்டில் விற்றிருக்கும் வாசுதேவனைத் தெரிசிக்கப் பெரு வேட்கையுடன் யுத்தகளத்தை நோக்கிச் சென்றான்.

அரசன் ஹம்சத்துவஜன் நன்னெறி யுற்றவனும், உலக காவலனும், சூரவீரனும் இறை வழிபாடு கொண்டவனும் ஆவான். அவனது அரசாங்கத்தில், அரண்மனையிலும் குடிகளிலும் உள்ள ஆண் மக்கள் அனைவரும் ஏக பத்தினி விரதம் கொள்வதுடன் தேசத்திலுள்ள ஆண் பெண் மக்களனைவரும் இறை வழிபாட்டில் ஈடுபட்டவரென்பதும் ஒரு தனிச் சிறப்பு. தனது அரசாங்கத்தில் உத்தியோகத்தின் பொருட்டு எவரேனும் வெளி நாட்டிலிருந்துவரின் எல்லாவற்றிற்கும் முன் அவனிடம் இவ்வாறுகேட்பார் 'மாசற்றவனே! நீ ஏக பத்தினி விரதம் உடையவனாயிருப்பின் உன்னை நான் வேலையிலமர்த்திக் கொள்வேன். அப்பா! நான் உண்மையே கூறுகிறேன். புறங் காட்டாத வீரத்தனத்தையும், நற்குடிப் பிறப்பையும், பராக்கிரமத்தையும் நான் விரும்புவ தில்லை. எவன் தன் பத்தினியிடம் மாத்திரம் காதலுடையவனும் கடவுள் வழி பாட்டில் அன்புடையவனுமாகின்றானோ அவனுக்குத் தான் என் அரண்மனையிலும் நாட்டிலும் யான் இடமளிப்பேன். எவன் மன்மத வேகத்தை அடக்க ஆற்றலுடையவனோ அவனே உண்மையான தீரன். இவ்வாறு அரசாங்க அதிகாரிகள் மக்கள் எல்லோர் வாழ்கையிலும் அறமும், ஒழுக்கமும் அவலம்பித்திருந்தன. அரசனுடைய படை வீரர்கள் எல்லோரும் ஆண்டவனன்பும், எளியோர்

பாவிரக்கமும், வள்ளன்மையும், ஏகபத்தினி விரதமும் நற்குணமும், இன்சொல்லும் உடையவர்கள். ஆதலால் அரசனுணை பெற்ற வீரர்கள் அர்ஜுனனோடு மல்லிட மனமிசைந்தனர். யாகக்குதிரை பிடிக்கப் பட்டது. அறத்திலும், நீதியிலும் பெரும் அறிவுடைய வரும் ராஜ குருக்களுமான சங்கன், லிகிதன் என்னும் மாமுனிவர்களுடைய கட்டளைக்கிணங்கி இக்கொடிய விளம்பரம் வெளியிடப் பட்டது. "குறிப்பிட்ட நேரத்தில்-' எல்லாப் படைவீரர்களும் யுத்தகளத்தில் வந்தாக வேண்டும். எவனொருவன் அச்சமயத்தில் வரத் தவறுவானே அவன் கொதிக்கும் எண்ணெய்க் கொப்பரையில் அமிழ்த்தப் படுவான்; இக்கட்டளை, குடிகளைப் போன்று அரசன், மகன், பேரன், உடன்பிறப்பு சுற்றமாகிய எல்லோரிடத்தும் சமமாக இயங்குவது;

அரசனுடைய எல்லாப் படைத் தலைவரும், அமைச்சர்களும், சகோதரர்களும், சுபலன், சுரதன், சமன், சுதர்சனன் என்னும் நான்கு புதல்வர்களும், ரணகளத்தை நோக்கிச் சென்றனர். அரச குமாரர் களில் எல்லோருக்கும் இளையவன் பெயர் சுதன்வா. வீரனாகிய சுதன்வா தன் வீரத்தாயிடம் அனுமதி பெறச் சென்று, அன்னை அடிகளில் தலைவைத்து வணங்கி விண்ணப்பித்துக் கொண்டான். 'அம்மா நான் இன்று மிகப் புகழ்பெற்ற வீர விஜயனுடன் போராடப்போகிறேன். இது எனது பெரும் பாக்கிய மாகும். பார்த்தனால் பாலிக்கப்படும் ஹரியை ஜெயித்துவர ஆசிர்வதியுங்கள்!' வீரத்தாய், பகவானி டத்தில் பரமபக்தியுடையவர். அவருக்கு இத்தடவை தம் மகன் போரில் நின்றும் திரும்பமாட்டான் என்

பது தெரியும். ஆதலால் அன்னை கூறினாள் "குழந்தாய் போர்க்களம் புகுந்து, ஹரியை வென்று, அவசியம் என்னிடம் அழைத்துவா. முத்தியளிக்கும் ஹரியைத் தான் அழைத்துவர வேண்டும். நான்கு காலுள்ள ஹரியை அல்ல. மறத்திறம்கொண்ட நின் தந்தை இன்றளவும் போரில் பெரும் பெரும் வீரர்களை வென்றுள்ளார். ஆனால், கம்ஸனைக் கொன்ற கண்ணன் காட்சி அவருக்குக் கிடைக்கவே இல்லை. என் மகனே, இன்று அம்மாதவன் தரிசனத்தை எங்களுக்குக் காட்டுவாயாக. நீ இன்று இவ்வளைக் கண்களால் ஆயர் மங்கையர் ஆடை கவர்ந்த அம் மாதவனைப் பார்க்கப் போகின்றாய். கண்ணபிரானைக் காண்பது கடினம். நான் உனக்கு ஒரு உபாயம் சொல்லுவேன்; இறைவன் அடியாரிடத்து அருள் உடையவன். அவ்வாறு அருள் உடைமையினால்தான் குருக்ஷேத்திரப் போரில் பார்த்தனுடைய தேர்ப்பாகனானான். இன்று அர்ச்சுனனைக் காப்பாற்றும் பொருட்டு கண்ணன் வரலாம். அமர்க்களத்தில் நீ அர்ச்சுனனை எதிர்த்துப் போராடு. அத்திருமாயவன் நின் எதிரே வெளிப்படுவார். மேயச் சென்ற மாடு கன்றைக் காட்டில் விட்டு விட்டிற்குத் தனியே வராததுபோல, பகவான் தனது பக்தர்களை ஆபத்தில் தனியே விட்டு விடமாட்டார். மகனே! நீ, கண்ணனைக் கண்டு அஞ்சி விடாதே. அவனைக் கண்டு அஞ்சும் நெஞ்சினர் உயிரோடு இருக்க முடியாது. நீ அச்சம் கொள்வாயானால், எல்லோரும் என்னைப் பழிப்பார்கள். நீ போர் புரிந்து அமர்க்களத்தில் விழுந்து அரிய வீரர்க்குரிய வீர சுவர்க்கத்தை அடைவாயானால் உன்னையின்ற என் மனம் மிக மகிழ்ச்சி யடையும். என் மதலையே இச் சொல்லை மறவாதே"

கண்ணன் முன்னிலையில் இறப்பவன் உண்மையில் இறவாதவனே. அவன் இருபத்தோரு தலைமுறைக்கும் நற்கெதி தேடிக்கொள்கிறுன். எந்தத் தாயின் புதல்வரும் பேரன்மார்களும் திருக்கண்ணனை நாடிச் செல்ல மாட்டார்களோ அவள் இவ்வுலகில் வருந்தத் தகுதியுடையவள். அன்று உண்மைத் தாயான சுபத்திரை தன் அருமந்த மகனுக்கு இவ்வுபதேசமே வழங்கினுள்.

அன்னையின் நல் உபதேசத்தைக் கேட்ட வீர சுதன்வா மனம் மகிழக் கூறினுன். "என் ஆருயிர்த் தாயே உமது கட்டளைப்படி அமர் புரிவேன். உடல் உயிர் இவற்றைப் பொருட்டாக மதியேன். வீரத்துடன் போர்புரிந்து ஹரியைக் கொண்டுவருவேன். முயற்சிப்பதுதான் என் கடமை. பயனளிப்பது கடவுள் சித்தம். திருக்கண்ணனைக் கண்டு புறம் காட்டுவேனுயின் நான் உன் வயிற்றில் பிறந்தவனுகேன். எனக்கு நற்கதியும் கிட்டாது."

பிறகு சகோதரி குபலாவிடத்தில் அனுமதியும் உற்சாகமும் பெற்று, சுதன்வா, கற்புக்கரசியான தனது பத்தினி பிரபாவதியிடம் சென்றுன். அவள் முன்னதாகவே தங்கத் தட்டிலே சந்தனம், புஷ்பம், குங்குமம், கற்பூரம் சகிதமாக வீட்டு வாசலில் தன் காதற் கணவன் வரவு நோக்கிக் காத்திருந்தாள். கற்பரசி பக்தியோடு வீரநாயகனைப் பூஜித்தபிறகு வணக்கத்துடன் சில விஷயங்களை குயில் போன்ற இனிய சொல்மொழியில் சொல்லத்தொடங்கினுள் "பிராணநாதா திருக்கண்ணனைக் காணவேண்டுமென்று அல்லும் பகலும் வருந்தும் தங்கள் முகத்தை நான் கண்டு நிற்கிறேன். நாதனே! இன்று தங்களுடைய ஏகபத்

நினி விரதத்திற்கு முடிவு என்று நான் எண்ணுகி றேன். தாங்கள் யாரிடம் காதல் கொண்டு உற்சாகத் துடன் செல்கிறீர்களோ அந்தப் பெண் என்னைப் போல் தங்களிடம் ஒரு பொழுதும் நடந்துகொள்ள மாட்டாள். நான் தங்களைத்தவிர வேறொருவன் முகத்தை மறந்தும் பார்த்தவளல்ல. ஆனால் அந்த முத்தி என்னும் அழகியோ, தந்தை மகன் என்னும் எல்லோரிடமும் செல்லுவாள். தங்கள் உள்ளத்தில் முத்தி இடம் பெற்றுவிட்டாள். இக்காரணத்தினால் திருக்கண்ணன் வாயிலாக அம்முத்திப் பெண்ணைச் சேரத் தாங்கள் விரைந்து செல்கிறீர்கள். அவர்களு டைய மனம் அமரப் பெண்களையே நாடும். ஆனால் இதை உறுதியாகக் கொள்ளுங்கள். மாயா புருஷ னை திருமாலைக்கண்டு அவனுடைய ஒப்பற்ற முகக் காந்திவிசுமானால் முத்தி தங்களுக்குப் பிரியமாக மாட்டாள். கண்ணனுடைய அன்பர்கள் அவனு டைய அன்பினாலே தங்களையும் மறந்துவிடுவர். அவர் கள் முத்தியை விரும்பமாட்டார்கள். ஆனால் முத்தி யோ வேலைக்காரிபோல அவர்களுக்குத் தொண்டு செய்யத் தருணம் தேடி அவர்கள் கூடவே இருப்பாள். அவர்களோ அவளைத்திரும்பியும் பார்க்க மாட்டார் கள். கண்ணன் தானகவே முத்தியளித்தாலும் அவர்கள் கொள்ளமாட்டார்கள். இதைக் கண்ணனே புகழ்ந்து கூறுகிறான். "எனது பக்தர்கள் சாலோக் யம், சாமீப்பியம், சாரூப்பியம், சார்ஷ்டி, சாயுட்சியம் இவ்வகை முத்திகளை நான் கொடுத்தும் என் பணி விடையைத் தள்ளிக் கொள்வார் இல்லை." தாங்கள் கண்ணனின் அழகைக் காணுதவரை முத்தியில் ஆசை கொள்வீர்கள். ஆண்களைப்போல பெண்கள்

இதர புருஷர்களை நாடிச் செல்ல மாட்டார்கள். தாங்கள் முத்தியை நாடிச்சென்ற பிறகு நான் மோக்ஷத்தை நாடிச்சென்றால் தாங்கள் என்ன செய்ய முடியும். விவேகம் என்னும் கண்ணால் காண முடியாத ஓர் புதல்வன் என்னை எந்த நேரமும் காத்து வருகிறான். யாருக்கு விவேக மென்னும் புத்திர னில்லையோ அவள்தான் பரபுருஷனை நாடிச் செல்லு வாள். நான் சிறு பருவத்திலேயே விவேக மென்னும் மகனைப்பெற்றேன். ஆதலால், என்னுயிர் நாயகா! எனக்கு மோக்ஷத்தை நாடிச் செல்வதில் சங்கோச முண்டாகிறது.

மனைவியினுடைய இனியதும் பொருள்கடங்கியதுமான நுண்ணிய மொழிகளைக் கேட்டு சுதன்வா, மனதில் ஒருவித செருமை நிறையக் கூறலானான் :- 'என் பிரியே! நான் திருக் கண்ணனிடம் போர்புரியச் செல்லுகையில், நீ மோக்ஷத்தை நாடிச் செல்வதை எப்படித் தடுக்கமுடியும்? நீயும் இந்த மேலான உடை, அணி, உடல், மனம் எல்லாவற்றையும் தியாகம் செய்து செல். எனக்கு இது முன்னமேயே தெரியும். நீ மோக்ஷத்தில் மிக மோகங் கொண்டிருக்கின்றாய்' என்று.

பிரபாவதி மொழிந்தாள் ஆருயிரே! -'தாங்கள் அர்ச்சுனனிடம் அமர் செய்யச் சென்று கொண்டிருக்கின்றீர்கள். நான் எனது இதயத்திலுள்ள விவேக மென்னும் மகனை கண்களால் காண விரும்புகின்றேன் தாங்கள் சென்ற பிறகு அஞ்சலி யளிக்கும் நன் மகனை நான் கோருகிறேன்.

சுதன்வா-'பார்த்தனையும் பார்த்த சாரதியையும்

போரில் வென்று பிறகுதான் நான் உன்னிடம் வர முடியும்.

பிரபாவதி- ,,இல்லை நாதா. எவன் திருக் கண்ணை ணின் தெரிசனத்தை செய்து கொண்டானே அவன் பிறகு இச் சம்சாரத்திற்கு ஒரு போதும் திரும்பி வருவானல்லன்.'

சுதன்வா- 'கற்பிற் சிறந்த காதலி! இதே உனது உறுதி யெனில் திருக் கண்ணனை தெரிசித்த வர்கள் மீண்டும் வரமாட்டார்களாயின் பிறகு பயனற்ற அஞ்சலியிடும் புதல்வனை ஏன் விரும்பு கிருய்?'

பிரபாவதி- 'என்னுசையைத் நாங்கள் பூர்த்தி செய்துதான் ஆகவேண்டும்.'

சுதன்வா :- 'என்ன கண்மணி! உனக்கு அரசனு டைய கடுங்கட்டளை தெரியாதா? அற்பமேனும் தாமதமேற்படில் கொதிக்கும் எண்ணெய்க் கொப் பரை காத்துக்கொண்டிருக்கின்றது. எல்லாப் படை வீரர்களும் போய்விட்டனர். நான் ஒருவனே இங்கு மிஞ்சியுள்ளேன்.'

பல விதத்திலுமாக வினு விடைகள் நிகழ்ந்தன. இந்தத் தர்ம சங்கடத்தின் முடிவில் கற்பரசி பிரபா வதிதான் வெற்றி பெற்ருள். பிறகு, சுதன்வா ஸ்நானம், பிராணுயாமம் முதலியவை முடித்துக் கொண்டு, போர்க்களத்திற்குத் தேரேறிச் சென்ருன்.

* * *

யுத்த களத்தில் வீரப்படைகள் கூட்டங் கூட்ட மாகக் கூடியிருந்தன. நாலு திசைகளிலும், ரண துந்துபியும் சங்கத்தொனிகளும் முழங்கின. நான்கு

இராஜகுமாரர்களும் எல்லாப் படைத்தலைவர்களும் வந்து, அரசன் ஹம்சத்துவஜனை இராணுவ முறைப் படி வணங்கினார்கள். ஆனால், வீர மணியும், அரச குமாரனுமான சுதன்வா இன்னும் வரவில்லை.

அரசன் சேனாபதியை நோக்கிக் கூறினான்; "என்னசெய்தி சுதன்வாவைக் காணோமே. இவ்வளவு பெரிய தவறுதல் அவன் எப்படித்தான் செய்து விட்டான். என்ன எனது கடுங்கட்டளையை மறந்து விட்டானா? அவன் பெருந் துரோகத்தைச் செய்து விட்டான். இருக்கட்டும். சில படை வீரர்கள் சென்று அத்துஷ்டனின் முடியைப் பிடித்துத் தரையில் இழுத்து எண்ணெய்க் கொப்பரை யருகில் விரைவில் கொண்டு வரட்டும்."

இக் கொடிய அரச ஆணையைப் பெற்று, சில படை வீரர்கள் சென்றனர். சுதன்வா, அவர்களை வழியில் சந்தித்தான். மர்மத்தைத் துளைக்கும் உள்ளத்துடன் அரசனுடைய, மிக்க கொடிய ஆணையை சுதன்வாவின் செவியில் செலுத்துவது அவ்வீரர்களின் கடமையாகி விட்டது.

சுதன்வா, தந்தையின் தாள்களைத் தாழ்மையுடன் வந்து வணங்கித் தாமதம் நேர்ந்த காரணத்தைச் சுருக்கமாகத் தெரிவித்தான். அரசன் ஹம்சத்துவஜன் கோபத்தால் துடித்துக் கொண்டிருந்தான். அவன் சொன்னான்—'நீ பெரிய முட்டாள். ஆண்டவன் ஹரியுடைய திருவருளின்றிப் புத்திரனால் மாத்திரம் ஒருபோதும் நற்கதி யுண்டாகாது. கேவலம், மக்களைப் பெற்றோர்களுக்கு நற்கதி யுண்டெனில் நாய் பன்றி முதலியவைகளுக்கும் அவசிய முண்டாக வேண்டும். சீ உனது வலிமை, பராக்கிரமம், எண்ணம் இவையனைத்தும்

இகழத் தக்கவையே. இருக்கண்ணனின் நாமத்தைக் கேட்டும் உனது உள்ளம் காமத்திற்கு வயப்பட்டது. இப்பேர்ப்பட்ட அழுக்குற்ற மனமுடையவனும், காம வெறி கொண்டவனும், கண்ணனிடம் விருப்பமற்ற வனுமாகிய குபுத்திரனைக் கொதிக்கும் தைலக் கொப் பரையில் மூழ்கடிப்பதே மிக உசிதம்.'

சுதன்வா தலை தாழ்த்தியபடி தைரியத்துடன் எல்லாம் கேட்டுக் கொண்டிருந்தான்.

அரசன், புரோகிதர்களான சங்கனிடமும், லிகித னிடமும் விவஸ்தையின் பொருட்டுத் தூதனையனுப்பி னன். புரோகிதரிருவரும் பெரும் வெகுளி கொண்ட வர்கள். அவர்கள் தூதனுடைய சொல்லைக் கேட்டதும் சினங்கொண்டு விழிசிவந்து கூறினர்கள் 'அசரன் தன் மைந்தன் பாலுள்ள வாஞ்சையால் மயங்கி முறையை நாடுகின்றன். எல்லோருக்கும் ஒரு நியமமென விருக்க இங்கு பிரத்யேகமாக விவஸ்தை யென்ன வேண்டியிருக்கிறது? எந்த மந்தமதியுடையவன் லோபம் அல்லது பயத்தினல் தன் சொல்லைக் காக்கத் தவறுகின்றனே அவன் மிக நீண்டகாலம் வரை நர கத்திலே பெரிய துயரங்களை யுறுவான். அரிச்சந் திரன், தசரதன், ராமச்சந்திரன் முதலியோர் தம் சொல்லைக் காப்பாற்றும் பொருட்டு எவ்வளவு கஷ்டத்தைப் பொறுத்தனர். இன்று ஹம்சத்துவ ஜன் புத்திர வாஞ்சையால் தன் சொல்லைத் தவறி நடக்க எண்ணுகிறன். ஆனல், நாங்கள் இவ்வளவு நெறிகெட்ட அரசனின் அரசாங்கத்தில் வாழ விரும்பு வதில்லை.' இவ்வளவு மட்டும் சொல்லி அவ்விரு புரோகிதர்களும் போய் விட்டார்கள்.

தூதன் சென்று எல்லாச் செய்திகளையும் அரசனிடம் தெரிவித்தான்.

அரசன் ஹம்சத்துவஜன், சுதன்வாவைக் கொதிக்கும் எண்ணெய்க் கொப்பரையில் தள்ளும்படி மந்திரிக்கு உத்தரவிட்டு விட்டுப் புரோகிதர்களைத் தேடிச் சென்றான்.

மந்திரிக்கோ பெருந்துக்கம். ஆனால், வேறு வழியில்லை. மந்திரி சுதன்வாவிடம் பலவாறு மன்னிப்பை வேண்டித் தனது கடமையைத் தெரிவித்தான். சுதன்வா தீரத்துடன் கூறினான்; 'அமைச்சரே, தாங்கள் அரசனின் ஆணையை அவசியம் காப்பாற்ற வேண்டும். பரசுராமன் தன் தந்தையின் வசனத்தைக் காப்பாற்றத் தாயின் தலையையும் வெட்டித் தள்ளினான். எனக்கு, என் மரணத்தில் சற்றேனும் அச்சமில்லை; தாங்கள் சங்கோசமின்றி, என்னைக் கொதிக்கும் எண்ணெய்க் கொப்பரையில் தள்ளி விடுங்கள்.'

எல்லோரும், மந்திரத்தால் மயக்குண்டவர்களைப் போன்று, சுதன்வாவின் தீரத் தொனியைக் கேட்டுக் கொண்டிருந்தனர். நாலுபக்கத்திலு முள்ள மக்களுடைய கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந்தோடிற்று. ஆனால், சுதன்வா மகிழ்ச்சியுடன் நின்றான். அவன் தூய வுடைகளை யணிந்து, துளசிமாலையைக் கழுத்தில் தரித்து, கண்ணனின் திருவடியைத் தியானித்துக் கொண்டு தைலக் கொப்பரையில் குதிக்கச் சித்தமாகிப் பிரார்த்திக்க லானான். 'ஆண்டவனே, அச்சுதா, அமரரேறே, ஆயர்தங் கொழுந்தே, கோபாலா, கோவிந்தா, அன்பர்களின் அச்சத்தை

யழிக்கும் அகில நாயகனே, எனக்கு இறப்பதில் அற்பமும் அச்சமில்லை.'

'நானே தேவரீருடைய திருவடிகளில் உயிரை அர்ப்பிக்கத்தான் வந்திருந்தேன். ஆனால், தேவரீரைப் புறந்தள்ளி, நடுவில் காமத்தைச் சேவித்தேன். இதனால் தோன்றுவது, நான் தேவரீருடைய திருக் காவலிலின்றும் ஏமாற்றப்பட்டேன் என்பது தான். பிரபுவே, என்னைக் காப்பாற்றும் பொருட்டு இப்பொழுது கை நீட்ட மாட்டீரா?'

'யார் கேவலம், அச்சத்தால் மதிமறந்து துயரத்தில் விழுந்து தேவரீரை ஸ்மரிக்கின்றார்களோ, அவர்கள் சுகத்தையடைய மாட்டார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது.'

'பக்தர்களான, பிரகலாதன், துரௌபதை, ஆயர் பெண்கள் முதலியோர் தேவரீரைத் தியானம் செய்ய ஆபத்துக்காலத்தில் தேவரீர் அவர்களைக் காப்பாற்றினீர்; அந்திய காலத்தில் தேவரீரைத் தியானிப்பதால் மனிதன் தேவரீரையே யடைகிறான்.'

'ஓ. நாராயணா! தேவரீரை நிச்சயமாயும் அடைவேன், ஆனால், உலகத்தார்கள், சுதன்வா வீரனாயினும் போரில் புறங்கொண்டு, நெய்க் கொப்பரையில் வெந்துமடிந்தான் என இகழ்வார்கள். யுத்தகளத்தில் தேவரீருடைய பக்தனான வீர அர்ச்சுனனுடைய அம்பு மழையைக் கண்டுகளித்து அவனுடைய காண்டீவத்தை விட்டு வரும் கூரம்புகளால் அறுக்கப்பட்டு உயிர்துறக்க நேரினும் எனக்கோர் கவலையுமில்லை. ஆனால். இதோ இன்று குற்றவாளியான திருடனைப் போன்று இறக்கிறேன். ஆண்டவனே! இச்சிறுவன் இவ்வாறு இறப்பது அனுசிதமெனில்,

நெருப்புச் சூட்டினின்றும் காப்பாற்றி இவ்வுடலைத் தேவரீருடைய திருவடிகளின் முன் வீழ்த்துவீராக. நான் தேவரீருடையவனே. தேவரீருடையவனாக இருக்கவும் செய்வேன். தேவரீர் எல்லாம் வல்லவர் இராஜஸபையில் துரௌபதையின் மானத்தைக் காப்பாற்றும்பொருட்டு,துவாரகையைவிட்டு வரும்போது என்ன வேகம்! முதலையால் பிடிக்கப்பட்டு வருந்திய கஜேந்திரனைக் காப்பாற்றத் தேவரீர் வைகுண்டத்தை விட்டு என்ன வேகமாக வந்தீர்? உடல், உயிர், ஆவி இம்மூன்றையும் தேவரீருடைய திருவடிகளில் அர்ப்பித்த இச்சிறுவன், துன்பமுறும் இச்சமயத்தில் அவ்வேகம் எங்கே போயிற்று. இவ்வாறு துதித்துக் கொண்டே ஸுதன்வா கொப்பரையில் குதித்தான்.

பிரபுவின் திருவிளையாடல் விசித்திரம். ஒரு நாள் பிரஹலாதன் பொருட்டு இறைவன் நெருப்பைச் சந்தனக் குழம்பு போன்று சீதளமாக்கினர். ஒருநாள் இந்திரன் முதலிய விண்ணோர்களின் கர்வத்தை ஒழிக்க, காட்டுத் தீயைக் குஜர்ப்பித்தனர். இன்று பக்த சுதன்வாவைக் காக்கும் பொருட்டு, கொதிக்கும் எண்ணெயை சான்றோருள்ளம் போல் குளிர்வித்தார். சுதன்வா — பக்தியால், தாமோதரா, கோவிந்தா, மாதவா என ஆண்டவன் புனிதப் பெயர்களை வாழ்த்தி மெய்மறந்தான்.

சுதன்வா தைலக் கொப்பரையில் பிரேம சமாதியுற்றான். கொதிக்கும் எண்ணெயிலிருந்தும் அவனுடல் தகிக்கப்படாததுமட்டுமில்லை. மிதந்து கொண்டு மிருந்தது. இதைக்கண்ட ஜனங்களுடைய வியப்பிற் கோர் எல்லை யில்லை.

அரசன் ஹம்சத்துவஜனும், இரு புரோகிதர்களுடன் இதற்கு முன்னதாகவே அவ்விடம் வந்திருந்தான்; இச்செயல் அரசனுக்குப் பேராச்சரிய முண்டாக்கிற்று.

ஆண்டவன் திருவடிகளில் அன்பற்றவரும், தமது கல்வித் திறமையிலும் புத்திசாதுர்யத்திலும் கர்வங் கொண்டவருமான சங்க புரோகிதன் சுதன்வா மீது சந்தேக முற்று, அரசனிடம் கூறத் தொடங்கினன்.

'வேந்தே! என்ன செய்தி? எண்ணெய் கொதிக்கவில்லையா? அல்லது, உன்மகன் மணிமந்திர ஔஷதம் ஏதேனும் தெரிந்திருக்கின்றானோ?

'இவன் முகம் விரிந்த தாமரைபோன்று அழகுற்று தேஜஸினால் ஒளிர்ந்து கொண்டிருக்கிறது. இவனுடைய அங்கத்தில் ஓரிடத்திலேனும் கொப்புளம் காணவில்லை. நிச்சயந்தான்; இதில் யாதேனும் சூழ்ச்சி இருக்கத்தான் வேண்டும். உண்மையாக எண்ணெய் கொதித்திருப்பின் இவ்வாறு நடந்திராது. கொதிக்கும் தைலம் மனித தேகத்தை நீற்றுவதில்லையென்பது இயற்கைக்கு முரணானது.

'ஆஹா! அற நூலுணர்ந்த அந்தணா! இயற்கைக்கும் அதிபதி இறைவன். அவ்விறைவன் சங்கற்ப மாத்திரத்தால் ஆகாததும் ஆகும் என்பதை நீர் இன்னும் உணரவில்லையோ?'

சங்கன் அத்துடன் நின்றுவிடவில்லை. அவன் எண்ணெயைச் சோதிக்கும் பொருட்டு ஒரு தேங்காயைக் கொப்பரையில் விட்டான். கொதிக்கும் எண்ணெயில் தேங்காய் விழுந்ததுதான் தாமதம்;

தேங்காய் படீரென்று வெடித்து இரண்டு துண்டா யிற்று. அவ்விரண்டு துண்டுகளும் தெறித்து சங்கன், லிகிதன் இருவருடைய நெற்றியிலும் மிகச் சக்தி யுடன் தாக்கின. முனிகள் திகிலுற்றனர். இப் பொழுது அவர்களுடைய கண்கள் திறக்கப்பட்டன. ஆண்டவனுக்கும் அவனடிமைக்கும் எவ்வளவு மகிமை யுண்டென்பதை அவர்கள் நன்கு உணர்ந்து கொண்டனர்.

சங்கன் ஊழியர்களிடம் கேட்டான் 'கொதிக் கும் நெய்க் கொப்பரையில் குதித்தும் சுதன்வாவி னுடைய உடல் தகிக்காதிருக்கக் காரண மென்ன? இவன் ஏதேனும் மந்திரத்தை ஜெபித்தானா? அல்லது சூட்டைத் தணிக்கவல்ல ஏதேனும் மருந்தை உடலில் தடவினனா?'

ஊழியர்கள் வணக்கத்துடன் தெரிவித்தனர். 'முனிவரரே! அரச குமாரன் மந்திரத்தை ஜெபிப் பதையோ, மருந்தை தடவுவதையோ நாங்கள் கண் டிலோம். ஆமாம், இராஜகுமாரன் மிக வருந்தி அருட் கடலாகிய திருக் கண்ணபிரானை ஸ்தோத்திரம் பண்ணினனென்பது நிச்சயமே. இப்பொழுதும் சுதன்வாவின் உதடுகளுடைய அசைவைக் கவனியுங் கள். அவன் மாதவனுடைய நாமத்தையே ஜெபிக் கிறான்.'

இதைக் கேட்டதும் சங்கமுனி தன்னை இகழ்ந்து கொண்டே கூறலானான்:— 'சுதன்வா மிகவும் தன்யனே. பகவான் நாராயணனுடைய ஸ்மரணத் தில் தன் மனதை இவ்வளவு நிலைக்கச் செய்திருக் கிறான். என்னைப் போன்றவர்களுடைய வெறும்

புலமை, சீ பயனற்றதே. நாங்கள் பாண்டித்திய வெறியால் இறைவனை வெறுத்தோம்'

இவ்வாறு ஆயர்பாடியில் யாகம் செய்துகொண்டிருந்த அந்தணர்களும் திருக் கண்ணபிரானிடம் தமது மனைவிகள் கொண்ட ஒப்பற்ற பக்தியை வியந்து தங்களை யிகழ்ந்து சொல்லி யிருக்கின்றனர். "அந்தணராயினும் ஹரி பக்தி யில்லாத நமது யாக கர்மம், நுண்ணறிவு, சிறந்த குலம், குறைவற்ற செல்வம், இவையனைத்தும் வியர்த்தமே. ஆண்டவனுடைய மாயை யோகிகளையும் மயக்க முறுத்துகிறது. ஆஹா! உலகத்திற்கு உபதேச மளிக்கும் குருக்களாயினும் நாம் இன்று எதார்த்தமான சொந்தக் காரியத்தை விட்டு விட்டோம். இப்பெண்களுக்குத் திருக் கண்ணனிடத்தில் எவ்வளவு பக்தி! அவர்கள், பக்தியால் வீட்டிலுள்ள மமதை யனைத்தையும் ஒழித்தனர். கொடிய மிருத்யுவின் பாசத்தை நொடியில் அறுத்தெறிந்தனர். பெண்களுக்கு நம்மைப் போன்று ஒருவித சமஸ்காரமுமில்லை. குருகுலத்தில் வசித்துப் பயிற்சி பெறவில்லை. மாதவம் புரியவில்லை. ஆன்ம ஞானத்தை ஆராய்ச்சி செய்யவில்லை. அவர்களுக்கு சௌசமில்லை. நற்கருமங்களுமில்லை. ஆயினும், பதிதபாவனனாகிய பரமாத்மாவினிடத்து உறுதியான பக்தி ஒன்றினால் மட்டும் அவர்கள் இறைவனை யடைந்தனர். நமக்கு கல்வி, விவேகம், தவம், சௌசம், யாகம் என்னும் எல்லாவித சமஸ்காரங்களுமுள்ளன. ஆனால், வருந்தத்தக்கது, நமக்கு ஆண்டவனிடத்தில் அன்பில்லை.

ஆமாம், நாம் யோசிப்பின் இதுதான் உண்மையான சொல். ஆண்டவனுடைய திருவடிகளை எவன்

இடையீடின்றிச் சிந்தித்து அடைக்கலம் புகுகின்ருனே அவன்ருன் பெரியவன்; அவன்ருன் புத்திமான். பக்த சிகாமணியான பிரகலாதன் கூறியிருக்கிருன்—பனிரண்டு தரத்திலுள்ள நற்குணங்கள் நிறைந்த அந்தணனுயினும் ஆண்டவன் திருவடியில் அன்பில்லாதவனுயின் அவனைவிட, உடல் உயிர் ஆவி இவையனைத்தும் இறைவனிடம் அர்ப்பித்த சண்டாளனே மேலாவான். அப்பகவற் பக்தனுன சண்டாளன் தனது குலம் தேசம் இவையனைத்தையும் தூயதாக்குகின்ருன். சிறந்த பதவி யுடையவனுயினும் அன்பற்ற அந்தணன் தன்னைக்கூட தூய்மைப் படுத்த வல்லவனல்லன்.

ஸ்ரீ அப்பர் திருத்தாண்டகம்

"சங்கநிதி பதுமநிதி யிரண்டும் தந்து
தரணியொடு வானளத் தருவரேனும்
மங்குவாரவர் செல்வ மதிப்போமல்லோம்
மாதேவர்க் கேகாந்தரல்லராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோயராகி
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனுங்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் நாம் வணங்குங் கடவுளாரே"

இன்று சங்கமுனிக்குத் தன் செயலில் பெரும் பச்சாதாப முண்டாயிற்று. "நான் இன்று கொதிக்கும் நெய்க் கொப்பரையில் குதித்து மரணத்தைப் பிராயச்சித்தமாகக் கொள்வேன்" என்று மனம் நொந்து சொல்லிக்கொண்டே அவர் எண்ணெய்க் கொப்பரையில் விழுந்தார். பக்தன் சுதன்வாவின் நல்ல பாவனையால் கொதிக்கும் நெய், அவர் பொருட்

டும் சீதளமாயிற்று. சங்கன், சுதன்வாவை மார்போ டணைத்து, நடுங்கும் குரலில் கூறினார்—'அன்புமிக்க குழந்தாய்! நீ பெரும் சாதுத் தன்மை பொருந்திய வீர க்ஷத்திரியன்; நீ மிகவும் தன்யன். நானோ துஷ்ட பிராமணன். அறிவுகெட்ட என் கொடுமை, உன் போன்ற பக்தனைக் கொதிக்கும் எண்ணெயில் தள்ளி விட்டது. நான் உணர்ந்தேன்; 'எவனொருவன் திருக் கண்ணபிரானின் ஸ்மரணத்தைச் செய்வதில்லையோ, மூடனான அவன் நித்ய துயரத்தையும், துன்பத்தை யும் அடைவான். எவனொருவன், தன்னருளால் அன்பர்களுடைய துன்பம் நீக்கி இன்பமளிக்கும் எம்பிரான் திருக்கண்ணனை ஸ்மரிக்கின்றானோ அவனே உடலெடுத்தவர்களில் பெரியவனாவான்.'

"உன்னைப்போன்ற பரம பக்தர்களைத் தகிக்க அக்கினிக்கு என்ன ஆற்றலிருக்கிறது? அவ் ஆண்ட வன், பக்த பிரகலாதனை ஒருநாள் தீச்சுடரினின்றும் காப்பாற்றினார். நீயும் துயரமுற்ற தருணத்தில் அவ னடியை ஆஸ்ரயித்தாய். ஓ பக்த சிகாமணியே, உன் னுடல் தொட்டமையால் இன்று இவ் அதமனின் தீயவுடல் தூய்மை பெற்றது. மனிதனுக்கு, தன்னைப் புனிதப்படுத்த இதைவிட உயர்ந்த உபாயமில்லை."

"கங்கைமுதலிய தீர்த்தங்களும் பக்தர்வாயிலாகத் தான் தீர்த்தத்தன்மை யடைகின்றது. மன்னர் மன்ன ராகிய யுதிஷ்டிரர் விதுரரிடத்தில் கூறியிருக்கின்றார்:- "ஓ பிரபுவே, தங்களைப்போன்ற அடியார்கள் தீர்த்த வடிவினரே. பாபிகள் மூலம் குற்றமுற்ற தீர்த்தங்கள் தங்கள் போன்ற பக்தர்கள் வாயிலாக மீண்டும் தீர்த் தத்தன்மை யடைகின்றன. ஏனெனில், பக்தர்களு டைய உள்ளத்தில் சுயமாக; பகவான் வீற்றிருக்கின்

ருர். பக்தர்களுடைய தெரிசனத்தால் கண்கள் பய னடைகின்றன. பக்தர்களுடைய திருவடி ஸ்பரிசத் தால் உடல் புனிதமாகிறது. பக்தர்களுடைய குணங் களைப் பாடுவதால் நாக்குப் பயன்பெறுகிறது."

"ஏனெனில், இச்சம்சாரத்தில் பக்தர்களுடைய திருக்காக்ஷி மிகவும் துர்லபமே. ஆகவே, அரச குமாரா எழுந்திரு. தைலக் கொப்பரையினின்று வெளிவந்து தந்தையையும், நான்கு சகோதரர்களையும் எல்லாப் படைகளையும் தூய்மையடையச் செய்வ துடன், என்னையும் உத்தாரணம் செய்விப்பாயாக. கண்ணனைத் தேர்ப்பாகனுகக்கொண்ட அர்ச்சுன ேடு திறமையுடன் போர்புரிவாயாக!"

சுதன்வா முனிவருடன் கொப்பரையைவிட்டு இறங்கி அரசனிடம் சென்ருன். சங்கன், சுதன்வா வின் பக்தியையும், மகிமையையும் அரசன் முன்னிலை யில் மிகப் பெரிதாகப் புகழ்ந்தான்.

பூபதி மன்னவன் மகனை இதயத்துடன் சேர்த் துத்தழுவி நடுங்குங்குரலில் ஆசியளித்து, சாதாரண வீரர்களால் அமரில் அணுக முடியாத அருச்சுனனை, பராக்கிரமம் காட்டி எதிர்க்கும் பொருட்டு ஆணை யிட்டு அனுப்பினுன்.

* * *

கொடிய போர் ஆரம்பமாயிற்று. பாண்டவப் படைவீரர்கள் அருச்சுனன் தலைமையிலும், ஹம்ஸத் வஜனுடைய பெரிய படை ஸுதன்வா தலைமை யிலும் போர்புரிந்தன. பக்தனும் வீர க்ஷத்திரிய குமாரனுமான ஸுதன்வா முறையாக விருஷகேது, பிரத்யும்னன், கிருதவர்மா, ஸாத்யகி முதலிய பெரிய வீரர்களையெல்லாம் தோல்வியுறச் செய்தான். பாரத

மஹாயுத்தத்திற்குப் பிறகு இப்பொழுது எல்லோருக்கும் தமது தோல்வியை ஒப்புக்கொண்டு போர்க்களம்விட்டு ஓடநேர்ந்தது. அருச்சுனன் முன்னுக்கு வந்தான். இப்பொழுது இருதரப்பிலும் கண்ணனுடைய அன்யோன்யபக்தர்கள் நிற்கிறார்கள். ஆனால் இவ்வளவுதான் வேற்றுமை. அருச்சுனன் பெரிய பெரிய போர்களில் அனுபவம் பெற்றவன். ஸுதன்வா புதுப் போராளி. அருச்சுனனுக்குத் தனது பக்தியிலும் வீரத்தன்மையிலும் சற்று கர்வம் உண்டு. ஸுதன்வா எல்லா விதத்திலும் பகவானை நம்பியிருப்பவன். இன்று, கண்ணன், பக்திக்கும் வீரத்தனத்திற்கும் ஓர் எல்லையில்லை என்பதையும், எல்லாவற்றிற்கும் மேலாகக் கண்ணனுடைய உதவியும், ஸான்னித்யமும் இல்லாவிடில் அருச்சுனன் கேவலம் ஒரு சிறுவனால் தாக்கப்பட்டு தோல்வியுறுவான் என்பதையும் உலகத்திற்கு எடுத்துக்காட்ட விரும்பினார்.

அருச்சுனன் ஸுதன்வாவிடம் சொல்லிக்கொண்டே வந்தான் "வீர இளைஞனே! நான் பெரிய பெரிய போர்களில் வெற்றி பெற்றிருக்கின்றேன். மஹா வீரர்களான, பீஷ்ம பிதாமஹர், துரோணாசார்யர், குல குரு கிருபாசார்யர், மஹாத்மா கர்ணன் முதலியவர்களிடத்தில் என் பராக்ரமத்தைக் காட்டியுள்ளேன். கைலாஸபதி சிவபெருமானிடத்தில் என் வீரத்தனம் காட்டி பாசுபதாஸ்திரம் பெற்றுள்ளேன். அன்றியும் பெரும் பெரும் அரக்கர்களையும் அசுரர்களையும் நான் போர்க்களத்திலின்றும் துரத்தியிருக்கின்றேன். ஆனால், உன்னைப்போன்ற ரணசூரன் எனக்குத் தென்படவே இல்லை. எனக்கு உன்னைப்

பார்த்து உண்டான ஆச்சரியம் இதற்கு முன் உண்டாகவே யில்லை"

சுதன்வா கூறினன். "ஓ வீரசிகாமணியே முன் போர்களில் தங்களுக்கு பரம பிரியத்தைச் செய்யும் கண்ணபிரான் மிக கவனத்துடன் ரதத்தில் வீற்றிருந்து தேர்ப்பாகனுடைய தொழில் நடத்தினர். இன்று, தாங்கள் கண்ணனைப் பிரிந்து இருக்கிறீர்கள். அதுதான் தங்களுக்கு வியப்புத் தோன்றுகிறது. ஆமாம் தாங்கள் கண்ணனை எவ்வாறு விட்டு விட்டீர்கள்? ஒரு வேளை கண்ணனே என்னிடம் போர் புரியத் தங்களை யனுப்பினரா? சொல்லுங்கள். தங்களுக்கு என்னேடு தனியாகச் சண்டை செய்யச் சக்தி யிருக்கின்றதா? இல்லையா?"

சுதன்வா இவ்வாறு கூறக் கேட்ட அருச்சுனன் கோபங் கொண்டு, அவன் மீது பாண மழை பொழிந்தான். சுதன்வா சிரிப்பின் ஒளி பரவின முகத்துடன் இமைப் பொழுதிற்குள் அவனுடைய திவ்ய பாணங்களை யெல்லாம் முறித்து எறிந்து விட்டான். பெரும் பயங்கரமான போர் நடந்தது.

அருச்சுனன் தனது முழுச் சாதுர்யத்தையும் திறமையையும் கையாண்டான். ஆனல், சுதன்வாவின் முன்னிலையில் ஒன்றும் நடக்கவில்லை. வீரனும், பக்தனும், இளைஞனுமான சுதன்வா போர் புரியும் சாதுர்யத்தையும் இடையிடின்றிப் பாணமழை பொழிவதையுங் கண்டு அருச்சுனன் திகைத்துப் போனன்.

தேர்ப்பாகன் கொல்லப்பட்டு வீழ்ந்தான். இதைப் பார்த்ததும் சுதன்வா கெம்பீரமாகக் கலகல

வென்று சிரித்துக்கொண்டு கூறினான். "பார்த்தனே! தாங்கள் என் அம்புகளை யேற்று, குழைந்துபோய் விட்டீர். இன்று தங்களுடைய திறமை யெல்லாம் எங்கு ஓடி யொளிந்தது? வீரனான அருச்சுன! தங்கள் சர்வக்ஞனான சாரதியை விட்டுச் சாதாரண ஓர் தேர்ப்பாகனை வைத்துக்கொண்டது பெரும் பிழை யல்லவா? இப்பொழுது தாங்கள் என்முன் எல்லாப் போர்த் திறமையையுமிழந்து நிற்கின்றீர். அதனால், விரைவில் கண்ணபிரானாகிய தேர்ப்பாகனை ஸ்மரணை செய்யுங்கள்."

அருச்சுனன் தனது இடது கையில் வில்லையும், குதிரைக் கடிவாளத்தையும் ஏந்தி, போர் செய்யத் தொடங்கினான். அத்துடன் மனதில் தனதுயிர்க் காதாரமான—அகில உலகத்திற்கும் ஆதாரமான மாயா மாதவனைத் தீன பாவத்துடன் நினைத்தான். அவ்வளவுதான் தாமதம். கண்ணன் "விடப்பா குதிரையின் கடிவாளத்தை விடு" என்று சொல்லிக் கொண்டே தேரில் வந்தமர்ந்தார்.

வாசுதேவனுடைய வரவைப் பார்த்து, அருச்சுனனும் சுதன்வாவும் நமஸ்கரித்தார்கள். அருச்சுனனுக்கு மகிழ்ச்சியுண்டாவது இயற்கையே. ஆனால், சுதன்வாவின் மகிழ்ச்சியினுடைய நிறம் வேறுதான். எந்தக் காரியத்தின் பொருட்டுத் தாய் தந்தையருடைய ஆணை பெற்று, உயிர்க்குயிரான பிரிய மனைவியிடம் வாதாடி, போர்க்களம் புகுந்து அருச்சுனனைத் திகைப்புறச் செய்தானோ அச் சுப காரியம் இப்பொழுது நிறைவேறிற்று. பகவானுடைய திவ்ய ரூபத்தின் அழகையும், அவர் பக்த வாத்சல்யத்தையுங் கண்டு சுதன்வா கிருதார்த்தனானான்.

சுதன்வா மனதிற்குள்ளாகவே பலவாறு வணங்கி அந்தர்யாமியினுடைய பிரேரணைக்கிரங்கி, வெளிப் படையாகக் கூறினான். "ஓ கோவிந்தா, அருச்சுனன் பொருட்டு எழுந்தருளியிருக்கும் தேவரீரை நான் தெரிசித்தேன். தேவரீர் எங்கும் நிறைந்த பொரு ளென்றும் அனுபவித்தேன்." ஒரு ஸூக்ஷ்மமான சப் தத்தில் இவ்வளவும் சொல்லிப் புன்னகை பூத்த முகத்துடன் அருச்சுனனிடம் கூறலானான்.

"பார்த்தரே! தங்களுடைய தேர்ப்பாகன் கண் ணன் வந்து விட்டார். இப்பொழுது என்னை வெல்லும் விஷயத்தில் பிரதிக்ஞை செய்யுங்கள்."

சுதன்வா இச்சொல்லினால், திருக்கண்ணன் உங் களுடைய தேர்ப்பாகன் மட்டுமல்ல. என்னுடைய சர்வஸ்வமும் தான்" என்று அருச்சுனனுக்கு விளக்கிக் காட்டியது போலாயிற்று. சுதன்வாவினுடைய இவ் ஆர்ப்பாட்டமான சொல்லைக் கேட்டு அருச்சுனன் மூன்று பாணங்களை யெடுத்து, "இம் மூன்று அம்பு களால் உனது அழகான சிரசை நான் அறுத்துத் தரையில் வீழ்த்துவேன். அப்படிச் செய்ய முடியா விடில், என் தமையனார் புண்ணிய மிழந்து நரகத்தில் வீழுவாராக. எனது, இச்சொல் முற்றிலும் சத்தியமே இதில் சற்றேனும் பொய்யின்று" எனச் சபதம் செய்தான்.

அருச்சுனன் செய்த சபதத்தைக் கேட்டு மரணத் திற்காகத் துடிக்கும் வீரனும், பக்தனுமான சுதன்வா கையுயர்த்தி இவ்வாறு கோஷித்தான் 'கண்ணனின் திருச்சன்னிதியிலேயே தங்களுடைய இம் மூன்று அம்புகளையும் முறித்தெறிவேன். அவ்வாறு செய்யா விடில் நான் கண்ணனின் உண்மை பக்தன் அல்லேன்.

பாருங்கள். இருதரப்பிலும் தம்மில் முரண்பாடுள்ள சபதங்கள். இருவரும் மகா வீரர்களும் ஆண்டவனுடைய உண்மை பக்தர்களும் ஆவார்கள். இருதரப்பிலுள்ள படைகளும், எல்லா வின்னோர்களும், மாமுனிகளும், நடப்பதைக் காணவியப்புடன் இமைப்பின்றி விழித்துக் கொண்டிருந்தனர்.

சுதன்வா பாண வருஷத்தினுல் கண்ணனையும் இகைக்கச் செய்து, அவருடைய தேரைச் சற்று தூக்கியெறிந்ததுடன் பாணப் பிரயோகத்தின் திறமையால் அத்தேரைப் பம்பரம் போல் சுழலச் செய்தான். பிறகு பத்து அம்புகளால் அருச்சுனனை மூடி ஒரு பாணத்தினுல் அருச்சுனனுடைய தேரை நானூறு கைதூரத்திற் கப்பால் தூக்கியெறிந்தான். இதைக்கண்டு கண்ணன் பார்த்தனிடம் கூறினுன்:- "என்ன அப்பா நீ சுதன்வாவின் ஆண்மையைக் கண்டனையா? எத்தகைய இணையற்ற வீரன். நீ யென்னிடம் யோசியாமல் கொடிய பிரதிக்கினையைச் செய்து விட்டாய். அது நல்ல தல்ல. ஜெயத்ரதனைக் கொல்ல எவ்வளவு கஷ்டம் நேர்ந்தது என்பதை நீ மறந்து விட்டனையா? எந்த வீரன் உன்காலின் வலிமையாலும் பராக்கிரமத்தாலும் காக்கப்பட்ட ரதத்தை ஒரே ஒரு பாணத்தால் நானூறு கைதூரத்திற் கப்பால் தூக்கியெறிந்தானே அந்தவீரன் முன்னே எவ்வாறு வெற்றி பெறுவாய்? என் கவனத்தில் இது சுதன்வாவினுடைய உறுதியான ஏக பத்தினி விரதத்தின் மகிமையென்று தோன்றுகிறது. இந்த ஏகபத்தினி விரதத்திற்கு நானும் நீயும் வெகு தூரத்தி லிருக்கின்றோம். இன்னிலைமையில் பெரிய கஷ்டம் நேருவது நிச்சயமே" அருச்சுனன் சொல்லு

கிறுன். "ஓ கோவிந்தா, தேவரீர் எழுந்தருளிய பிறகு எனக்கேன் அச்சம். நான் நிச்சயமாக மூன்று பாணங் களால் சுதன்வாவின் தலையை யறுத்துத் தரையில் உருட்டுவேன். இப்பொழுது என்னிடம் ஒருவித கஷ்டமும் வந்தணுகாது. தேவரீரின் கையில் என் வாழ்க்கைத்தேரின் கடிவாள மிருக்க எனக்கு யார், எவ்வாறு, எவ்வித கஷ்டத்தைச் செய்ய முடியும்?"

முதல் பாணம் அருச்சுனனது கையில் ஜொலித் தது. அதோ சுதன்வா கூவுகிறுன். "கோவிந்தா! எம் பெருமானே! எவ்வாறு கோகுலத்திலே கோக்களைக் காக்கும் பொருட்டு, கோவர்த்தன மலையைக் கைத் தலத்தில் தாங்கினீரோ அவ்வாறு இன்று பார்த்தனைப் பாலிப்பீராக. ஆனுல், இதையும் மறந்து விடலா காது. நானும் தேவரீருடைய அடியார்க் கடியனே"

மாதவன் சுதன்வாவின் கீர்த்திக் கொடியை நீண்டகாலம் மண்ணிலும் விண்ணிலும் பறக்கும் வண்ணம் செய்வதுடன், அருச்சுனனையும் காக்கும் பொருட்டு, தான் கோவர்த்தன கிரியைத் தூக்கிய புண்ணியத்தையும் அருச்சுனனுடைய கைபாணத் துடன் சேர்த்துவிட்டார். பிரளய அக்கினிக்குச் சமா னமாக அருச்சுனனுடைய பாணம் பாய்ந்தது. ஆனுல், புண்ணிய மூர்த்தியான சுதன்வா ஒரு நொடியிலே அதை முறித்துத் தள்ளினுன்.

ஹம்சத்துவஜனும், படைகளும் பெரு மகிழ்ச் சியடைந்தனர். அருச்சுனனுடைய அம்பு முறிக்கப் பட்டதும் பூமி அதிர்ந்தது. விண்ணவர் எல்லையற்ற வியப்பில் மூழ்கினர். கண்ணன் சுதன்வாவின் வலி மையையும் ஆண்மையையும் வாழ்த்திக்

கொண்டு அருச்சுனனிடம் இரண்டாம் பாணத்தைத் தொடுக்கும் பொருட்டு ஆணையிட்டார். அத்துடன் தன் பல புண்ணியத்தையும் அர்ப்பித்துக் கொண்டார்.

சுதன்வா கூறினன், "கோவிந்தா! உன் திருவிளையாடல் வாழ்க. ஆனால், நினைவிருக்கட்டும். இவ்வடிமையும் உன் திருவிளையாடலில் பழக்க மற்றவனில்லையென்பது".

பிறகு, அருச்சுனனை நோக்கிக் கூறினன் :- "பார்த்தா! கண்ணனை ஸ்மரணை செய்து கொண்டு பாணத்தை விடுங்கள்"

அதோ அருச்சுனன் பயங்கர பாணம் பறக்கின்றது. ஆனால், சுதன்வா தன் பேராற்றலால் அதனையும் நடுவில் முறித்தெறிந்தான். இரண்டாவது அம்பும் முறிக்கப்பட்டதைப் பார்த்து அருச்சுனன் மனம் சற்று வாடிற்று. போர்க்களத்தில் ஹா ஹா வென ஆரவாரம் முழங்கிற்று. எல்லோரும் ஒரே முகமாக சுதன்வாவின் விரத் தனத்தைப் புகழ்ந்தனர்.

பிறகு, அத் திருவிளையாட்டுக் கூத்தன் மூன்றும் பாணத்தைத் தொடுக்க அருச்சுனனுக்கு ஆக்ஞை யளித்துத் தனது ராமாவதார காலத்தில் கையாண்ட பாணத்தின் மகிமையையும் அர்ப்பித்தார். பாணத்தின் பின்பக்கத்தில் பிரம்மாவையும், நடுவில் காலனையும், நுனியில் தானும் அமர்ந்துகொண்டார்.

சுதன்வா கூறினன். "எம்பெருமானே தேவரீர் என்வதத்தைச்செய்யப் பாணத்தில் சுயமாக வீற்றிருக்கிறீர் என்பதை நான் அறிந்து கொண்டேன். எழுந்தருளுங்கள். நாதனே, என்னை இந்த அமர்க்களத்தில் தேவரீருடைய திருவடிகளில் அடைக்களம் அளித்துக்

கிருதார்த்தனுகச் செய்வீர்களாக. நான் இதைத்தான் விரும்பிக்கொண்டிருந்தேன். இதைவிடப் பெரும் பாக்கியம் எனக்கேது?"

"வீர அருச்சுன! தாங்கள் தன்யரே. சாக்ஷாத் நாராயணன் தங்கள் பொருட்டுத் தமது புண்ணியத் தோடு, தாமும் பாணத்தில் வீற்றிருந்தருளுகின்ருர். தங்களுக்கு உறுதியாக மங்களமுண்டாகும். ஆனுல், கண்ணனின் திருவருளால் நான் தங்களுடைய பாணத்தை நிச்சயமாக முறித்துவிடுவேன்."

அருச்சுனனுடைய பாணம் பறந்தது. சுதன்வா கண்ணன் நாமத்தை ஜெபித்துக்கொண்டே சட் டென்று அப்பாணத்தையும் முறித்துவிட்டான். சுதன்வாவினுல் முறிக்கப்பட்ட பாணத்தினுடைய பாதி தரையில் வீழ்ந்தது. பாணம் முறிந்ததும் சந்திர மண்டலம் நடுங்கிற்று. பக்தன் சுதன்வாவினுடைய சபதம் நிறைவேறிற்று.

இனி அருச்சுனனுடைய சபதம் பூர்த்தியாக வேண்டும். பாணத்தினுடைய பாதி பாகம் ஆகாயத் திலுயர்ந்தது. அது சென்று, ஜொலித்துக்கொண் டிருக்கும் குண்டலத்தின் ஒளி பரவியுள்ள—ஆண்மைக் களஞ்சியமான—அழகின் இருப்பிடமான மஸ்தகத்தை உடனே கழுத்தினின்றும் வேறுபடுத்திற்று. சுதன்வா வின் கவந்தம் பாண்டவப் படைக்குள் புகுந்து ஓர் விதமான பரபரப்பை யுண்டாக்கிற்று. அவன் தலை, கேசவா! ராமா! கோவிந்தா! என்னும் திருநாமங்களை யுச்சரித்துக்கொண்டு, கண்ணனின் கமலம் போன்ற கழற்காலில் விழுந்தது.

தம் பாதத்தில் பதித்த பக்தன் சிரசை, பகவான் மிகப் பிரியத்துடன் இரு கரங்களாலும் எடுத்துக் கொண்டார். இதற்குள் வீர சுதன்வாவின் வாயி லின்று ஒரு ஜோதி வெளிவந்து எல்லோரும் விழித் துக்கொண் டிருக்கையிலேயே கண்ணன் முகத்தில் புகுந்துகொண்டது. இச்சம்பவத்தை மற்றொருவரும் அறிந்தா ரல்லர்.

ஆண்டவனும் அவனது அடிமையும் வாழ்க.

# தாமோதரனும் மனைவியும்

தாமோதரன் காஞ்சி நகரத்தில் வசித்துவந்தான். ஜாதியில் அந்தணன். அவன் மக்களுடைய உச்சியை முகர்ந்ததில்லை. இல்லத்தில் தானும் மனைவியும் மட்டுந்தான். வாழ்க்கை பிச்சையால் நடக்கிறது. சேது முதல் இமயமலை வரையில் தேடிப்பார்த்தாலும் தாமோதரனுக்கிணையான மற்றொரு பிச்சைக்காரனைக் காண்பதரிது. நாள்தோறும் அருணனுடைய கிரண கந்தளங்கள், வானத்தில் பரவுவதற்கு முன்னதாக ஸ்நானம், ஸந்தியாவந்தனம் முதலிய நித்தியகருமங்களை முடித்து, நெற்றியில் சந்தனத்தையும், நிர்மால்யத்தையு மணிந்து ராம! கிருஷ்ண! ஹரே! எனத் திருநாமங்களை உச்சரித்துக்கொண்டு தாமோதரர் பிச்சைவாங்கப் போவார். பிச்சை ஏதேனும் கிடைத்துவிடில் நல்லது. இல்லையேல் ஸந்தோஷக் குறைவொன்றுமில்லை. தினம் கிடைக்கிறது ஏதோ அதை மனைவியிடம் கொண்டுவந்து கொடுப்பார். பதியை உயிர்க்குயிராகக் கருதும் அவ்வம்மை ஆனந்தத்துடன் சமைப்பாள். இறைவனுக்குநைவேத்யம் செய்வாள். பிறகு இரண்டுபேரும் உட்கொண்டு மகிழ்ச்சியடைவார்கள். ஏதோ ஒரு நாளில் எவரேனும் பசிவேட்கையுடன்வரின் அவரைப் புசிப்பிப்பார்கள். யாதேனும் மிஞ்சியிருப்பின் தாங்களும் புசிப்பார்கள். இல்லையேல் அத் தினம் பட்டினியாகக் கழிப்பார்கள். அத்தம்பதிகள் பரமானந்தத்துடன் பட்டினியை ஏற்றுக்கொள்வார்கள். இருவருக்கும் முக்கிய

மான தொழில் கண்ணனுடைய பஜனைதான். அவர்கள் இரவும் பகலும் அதில் மூழ்கினர். பிறரைப் பற்றிய பேச்சே கிடையாது. எவரையும் இகழ்வ தில்லை. உள்ளத்தில் ஜீவகாருண்யம் நிறைந்திருந்தது.

வீட்டில் ஒன்றுமில்லையாயினும், அவர் தமக்காக இறைவனிடம் ஒன்றும் அபேட்சிக்கமாட்டார். அவர் ஆண்டவனிடம் ஏதேனும் விரும்புவாரானல் அது பிற ஜீவராசிகளுடைய சௌக்கியமே. பஜனை செய்து கொண்டிருக்கையில் சிலநேரத்தில் அவர்களுக்குப் பகவான் இப்பொழுது திருக்காக்ஷி யளிப்பார் என்று தோன்றுவதுண்டு. அப்பொழுது அவர்கள் கைகூப்பி இறைவனிடம் வெண்டுவார்கள்–‘ஓ அருட் கடலாகிய பிரானே, உலகத்திலுள்ள உயிர்கள் தேவரீருடைய மங்களமான திருவுருவத்தைப் பார்க்க வில்லை. அதனல், அவர்கள் அமங்களத்தை மங்கள மென எண்ணி, கழுத்தில் கட்டிக் கொண்டிருக்கின் றனர். அவர்களிடத்தில் அருள்புரிவீராக. அவர்களுடைய மயக்கத்தை நீக்கி ஆட்கொள்வீராக. தேவரீருடைய ஆனந்த மந்தாகினியின் தூயதாரை யால் அவர்களுடைய இருதயத்தை நனையச் செய்வீராக! இம்சையும், துவேஷமும், பொறாமையும் மறந்து, எல்லோரும் அன்புடையராக இருத்தல் வேண்டும். தேவரீருடைய பரம மங்களமான திருவுருவம் எல்லோருள்ளத்திலும் எக்காலத்திலும் விளங்கிக்கொண்டிருத்தல் வேண்டும்.”

தோலினுல் மூடப்பட்டிருப்பினும் கஸ்தூரியின் நறுமணம் சற்று வெடித்து வெளி வந்து விடுகிறது. அந்தப் பிரகாரம் தாமோதரனுடைய புகழின் தூ மணமும் பழைய ஓட்டைக் குடிசையின் திரையை

நீக்கி, எல்லாத் திசைகளிலும் பரவியது. முறைப்படி, அது அந்த உண்மை நாடு வரையிலும் சென்றது. அந்நாட்டின் அரசன் பெரிய ரசிகன். அந்த மணத்தைப் பற்றிக்கொண்டு காஞ்சி நகரத்திற் கெழுந்தருளினார். எண்ணமென்ன? மெய்யையும் பொய்யையும் சோதிக்கத்தான். இந்த அரசன். பெரிய மாயாவி. வந்ததும் ஒரு கிழச்சந்நியாசியாக மாறிவிட்டார். ஒரு அடிகூட நடக்க முடியாத விதம் உடல் அவ்வளவு பலஹீனமும், கிழத்தனமும் உடையதாயிருந்தது. கையிலுள்ள கோலின் உதவியால் மெல்ல மெல்ல நடந்து அவ்வேழை தாமோதரனுடைய வாசலில் வந்து உட்கார்ந்தார். ஆண்டவனுடைய மாயை? தாமோதரனுக்கு அன்று தினம் பிக்ஷையில் ஒருபிடி அரிசிகூடக் கிடைக்கவில்லை. வெறுங்கையுடன் வீட்டுக்குத் திரும்பினார். மனைவி புருஷன் இருவரும் பசியுடன் தரையில் படுத்துக் கொண்டு சிந்தாமணியுடைய திருவடியைச் சிந்தித்துக்கொண்டிருந்தார்கள்.

"ஓ பிரபுவே! ஸ்வாமியே! தேவரீர் நிக்ரகமோ அனுக்கிரகமோ எதை வேண்டுமானாலும் செய்ய வல்லவர். எங்களிருவருக்கும் தேவரீரன்றி வேறு யாருதவி? பிறருதவி யில்லாத அனாதைகள் எவரோ அவர்களைக் காப்பாற்றுவது தேவரீரே. ஓ, நாதனே! தேவரீர் வஜ்ஜிர கவசம்போன்று பக்தர்களின் உடலில் தங்கி, அவர்களுடைய எல்லா தோஷங்களையும் நீக்குகிறீர். தேவரீர், துர்ஜனங்களாகும் மண்டூகங்களுக்குக் கருநாகம். உலகத்திலுள்ள எல்லா உயிர்களுக்கும் விலையற்ற சிந்தாமணி. மதங்கொண்ட மனித மாதங்கங்களுக்கு சாக்ஷாத் கேசரியே. இன்று

மிக எளிய. இவ்வடிமைகளுடைய ஒரு அச்சத்தை யொழித்தருள வேண்டும். தேவரீருடைய திரு நாமங் களின் பெரும் மகிமையால் இந்த அடிமைகளை ஜெகத்திலுள்ள எந்த பயம் துன்புறுத்த முடியும்? மரணம் நேரினும் அஞ்சமாட்டோம். இத்தகைய அச்சத்தை யொழிக்க அபேட்சிப்பதில்லை. இந்தச் சமயத்தில் எவரேனும் பசியுள்ள அதிதி வருவாராயின் அவருக்கு எவ்வாறு அன்னமிட்டுப் பசியாற்ற முடியும்?" இதுதான் இவ்வடிமைகளின் பேரச்சம்.

தாமோதரனும் மனைவியும் இவ்வாறு சிந்தித்துக் கொண்டிருக்கையில் அவர்களுடைய காதிற்குள் ஒரு அதிதி யுடைய தீனக்குரல் நுழைந்தது-' வீட்டிற்குள் யார்? நான் அதிதி, உங்களுடைய வீட்டு வாசற்படி யில் நின்று கொண்டிருக்கின்றேன்." அதிதியுடைய தீனமான குரல் காதிற்குள் நுழைந்ததும் தாமோதரன் விரைந்து வெளியில் வந்தான். பார்த்தான். ஒரு களைப்புற்ற கிழவன் அதுவும் மிக தேஜஸ் உள்ள பெரியார் நின்றுகொண்டிருந்தார். தாமோதரன் மிகபக்தியுடன் சாஷ்டாங்கமாக வணங்கி மிக வினயமான குரலில் "ஸ்வாமி அடியேனுக்கு என்ன ஆணை." என்று கேட்டான். துறவி- "அப்பா உன் பெரிய புகழ் கேட்டு வந்துள்ளேன். நீ அதிதி களுக்கெல்லாம் நல்வரவு கூறி ஆதரவுடன்-அன்புடன் அன்னமிட்டு, ஆதரிக்கின்றாயாம். நான்-வேறு ஒரு வருடைய வீட்டிலும் சாப்பிடமாட்டேன். அதிதிகளை யாதரிப்பதில் யார் மிகக் கவனம் செலுத்த மாட்டார் களோ அப்பேர்ப்பட்ட மனிதர்கள் எவ்வளவுவேண் டிக்கொண்டாலும் போஜனத்திற்காக அவர்கள் வீட்டை எட்டியும் பார்க்கமாட்டேன். ஆனால், சிரத்

தையுள்ளவர்களிடம் கேட்டும் வாசித்துமுணர்ந்தேன். அதி திகளை ஆதரிப்போருடைய சமூகத்தில் உன் பெயரையும் கேள்விபட்டேன். அதனால் உன் போஜனத்தைப் புசிக்க மனம் மிக ஆசை உண்டாயிற்று. இன்று வந்தேன் ஒரு தரம் தாமோதரன் வீட்டில் சாப்பிட்டு வருவோம் என்று. அப்பா வயதான உடல் நடக்கத் திரிய மிகக் கஷ்டம். உன் சாப்பாடு சாப்பிடப் பேராசை கொண்டு எப்படியோ தட்டுத் தடுமாறி வந்து சேர்ந்தேன். என்ன? எனக்கு ஒரு பிடி அன்னம் கிடைக்குமா?"

தாமோதரன் எதற்காக அஞ்சி வருந்தினாரோ அது நடந்தே விட்டது. அதிதியின் சொல்லைக் கேட்டுத் தாமோதரனுடைய உள்ளத்தில் பெரிய கவலை யுதித்தது. எம்பெருமான் எண்ணினதே நடந்தேறிற்று என்றெண்ணி, குளிர்ந்த ஜலத்தால் யோகியினுடைய பாதங்களைக் கழுவி, இனிய குரலில் "ஸ்வாமி தாங்கள் மிகக் களைப்புடன் காணப்படுகிறீர்கள். தாங்கள் இத் தர்ப்பாசனத்தில் அமர்ந்து சற்று ஓய்வு கொள்ளுங்கள். நான் இதோ வந்து விட்டேன்" என்று உரைத்துத் தாமோதரன் வீட்டினுள் சென்று மனைவியுடன் கூறினான் "பிரியே! வெளியே அதிதி வந்திருக்கிறார். போஜனத்தை விரும்புகிறார். வீட்டில் ஒன்றுமில்லையே. என்ன செய்கிறது?"
"ஸ்வாமி நான் என்ன சொல்வேன்" தங்களுக்குத் தெரியாதது என்ன? வீடு வாசல் எல்லாம் சேர்த்து விற்றாலும் நாலு பணம் கிடைக்காதே. வீட்டில் வேறொரு துணி யிருப்பின் அதையேனும் விற்று ஏதேனும் வாங்கிவரலாம். என்னிடம் அதுவும் இல்லையே. கழுத்தில்லா ஓர் ஓட்டை மண் குடமும் ஒரு

குவளையுந்தானே நமது வீட்டுச் சம்பத்து. இதை அடமானமாகக் கொண்டு யார் என்ன கொடுப்பார்கள் ? இவ்வளவும் சொல்வதற்குள், அதிதிக்கு விருந்தளிக்கத் தனக்கு ஆற்றலில்லாது போயிற்றே என்று நினைக்க அவ்வம்மையாரின் கண்களில் நீர் ததும்பிற்று. மனைவியின் நிலைமையைப் பார்த்துத் தாமோதரனுடைய விழிகளிலும் நீர் வடிந்தது. அவர் பெருமூச்சு விட்டுச் சொன்னார் “ இப்போது என்ன ஆகிறது ? அதிதி சேவை நடக்காதா ? விருந்தாளி பசியுடன் திரும்பிப் போக நேரிடின் நாம் ஏன் உயிர் வாழ வேண்டும். கோவிந்தா ! ஏன் இவ்வளவு கொடிய பரீக்ஷை !”

பிராமணி, சிந்தைநொந்து வருந்தும் உள்ளத்தால் இறைவனைக் கூவிச் சற்றுநேரத்திற்குப் பிறகு ஒரு குறும்புச் சிரிப்புடன் தாமோதரனிடமொழிந்தாள். “ நாதனே ! இவ்வளவு ஏன் வருந்தவேண்டும் ? நமது ஆண்டவன் உலகத்திற்கோர் அதிபதியல்லவோ? அவன் அதிதிக்கும் அன்னமளிப்பான்; நிச்சயம். தாங்கள் ஒரு வேலை செய்யுங்கள். அம்பட்டன் வீட்டிற்குச் சென்று சட்டென்று ஒரு கத்தரிக்கோல் வாங்கி வாருங்கள். பிறகு உபாயங் கூறுவேன்.” தாமோதரன் இதோ வந்துவிட்டேன் என்று விரைவில் ஓடி கத்தரிக்கோல் வாங்கிவந்து மனைவியிடம் கேட்டான் ” சொல் இப்பொழுது என்ன செய்யப் போகிறாய் ? “ அவள் புன்னகையுடன் பாதம் வரை பரந்து கிடக்கும் கருங் குழலைக் காட்டிக்கொண்டு மொழிந்தாள் ? இந்த அழகிய சிறு முடியைக் கத்தரியால் நறுக்கி விடுங்கள். பிறகு நாமிருவரும் சேர்ந்து ஒரு இடுமயிர் கட்டிவிடுவோம். அதைத் தாங்கள்

விற்று கிடைக்கும் பணத்தைக்கொண்டு சமைய லுக்கு வேண்டிய பண்டங்களை வாங்கி வாருங்கள். இவ்வளவு உதவியிருக்க அதிதி சேவையின் பொருட்டு யோசிப்பானேன்?" தாமோதரன் தன் மனைவியுடைய சிறந்த யுக்தியையும் தியாகத்தையும் மனமாரப் புகழ்ந்து தன் கைகளால் அவள் கூந்தலைக் கத்தரித்தான். சுற்றிலும் கொஞ்சம் கொஞ்சம் விட்டு விட்டு நடுவிலுள்ள முடி அத்தனையும் நறுக்கினான். இருவரும் சேர்ந்து விரைவில் அழகிய ஒரு இடுமயிரை யமைத்தனர். தாமோதரன் அதை விற்கக் கடைத் தெருவிற்குச் செல்லவும், உடனே அதை வாங்குவ தற்கு ஒரு ஆளும் கிடைத்தது. தாமோதரன் அப் பணத்தால் அரிசி, பருப்பு, பால், தயிர், காய்கறி, நெய் இவ்வனைத்தும் வாங்கிப் பெரு மகிழ்ச்சியுடன் சிரித்துக்கொண்டே மனைவியிடம் வந்து ஒப்பித்தான். அவ்வம்மை சமைப்பதில் மிகத் திறமை பெற்ற வள். நாழிகை மொழுதில் சமையல் ஆகிவிட்டது.

தாமோதரன் வெளியில் சென்று விருந்தின ரிடம் போஜனம் செய்ய வேண்டிக் கொண்டான். விருந்தாளி வீட்டிற்குள் நுழைந்தார். தம்பதிகள் இருவரும் பெரிய ஆதரத்துடன் அவர் பாதத்தை நீராட்டி, அப் பாதோதகத்தை எடுத்துத் தம் தலையில் தெளித்துக் கொண்டனர். இன்று அத் தம்பதிகளு டைய மகிழ்ச்சி கற்பனைக் கெட்டாதது. உண்மை யாக இன்றைய அவர்களுடைய மகிமையை யாரால் கூற முடியும்? நான்முகனுக்குத் தனது கமண்டலத்தி லிருந்து எந்த ஜலத்தின் ஒரு துளிகூடக் குடிக்க முடியவில்லையோ அப் புனிதமான பாதோதகத்தை இன்று இவர்கள் தம் வீட்டில் உட்கார்ந்து கொண்டு

எளிதாக அடைந்தனர். பகவான் பாவனைக்கு வயப் பட்டவர். எங்கு பாவனையாகிய கமலம் விரிகின்றதோ அங்கு தேனில் விருப்பங் கொண்ட வண்டைப்போல் அவர் வந்து விடுவார். ஆனால் பாவனையற்ற மனிதன் எவ்விதத்திலும் அவரைச் சந்திக்க முடியாது.

அவ்வந்தணனுடைய இல்லத்தில் ஒரு உடைந்த மரப்பீட மிருந்தது. அதின்மேல், பெரிய ஆதரத் துடன் பதிவிருதையான அவ்வம்மை, துறவியை அமரச் செய்தனள். பிறகு தலைவாழை யிலையில் போஜனத்தைப் பரிமாறினாள். அவ்வம்மை பரிமாறு வதும் தாமோதரன் வீசுவதுமாகச் சேவை செய்ய, அத்திருவிளையாட்டுக் கூத்தன் - திருமால், பெருமகிழ்ச் சியுடன் புசிக்கத் தொடங்கினர். ஸ்வாமியார் மிகக் கிழவர் அதிகமாகச் சாப்பிட முடியாதவர் என் றெண்ணி, அந்தணி கொஞ்சமாகப் பரிமாறியிருந் தாள். ஆனால் அம்மாயைக் கிழவன் வைக்க வைக்க, எல்லாம் மென்று விழுங்கிக் கொண்டே இருந்தார். சொன்னார் "நல்ல சமையல், இருந்தால் இன்னும் கொஞ்சம் வை. இன்று சாப்பிடுவதில் நல்ல திருப்தி" அந்த அம்மை ஏதோ கொஞ்சம் மிஞ்சியிருந்ததையும் கொண்டுவந்து இலையில் பரிமாறினாள். அந்தர்யாமி இனி வீட்டில் உணவு ஒன்றுமில்லை என்றறிந்து கொண்டு, இருந்தது முழுவதையும் சாப்பிட்டு முடித்துக்கொண்டார். பிறகு கைகால் கழுவி வந்து சுகமாக ஆசனத்திலமர்ந்து, தாம்பூலம் மென்று கொண்டே சிந்திக்கலானர் "ஆஹா! இவர்களுடைய வாழ்க்கை மிகத் தூயது வீட்டில் ஒன்றுமில்லை. ஒரு உடைந்த மண்பானையும் ஒரு சிறு குவளையும் மட்டுந் தான் ஆஸ்தி. ஆயினும், அதிதிஸேவையில் இவர்

களுக்குள்ள அவா ஒப்பற்றது. எல்லாம் எனக்கு ஊட்டிவிட்டு இருவரும் பசித்துப் பட்டினியாக இருக்கின்றனர். எனினும் இவர்களுடைய உள்ளத்தில் கடுகளவும் சந்தோஷம் குன்றவில்லை. ஆஹா ! தம் கூந்தலுக்காகப் பெண்கள் என்ன வென்னதான் செய்கிறார்கள் ! அதிதிஸேவையின் பொருட்டு, கூந்தலை அறுப்பதில் இப்பிராமணி சற்றும் மனம் தயங்கவில்லையே. இவர்களுக்குச் சமானமாக இச்சகத்தில் யார் உளர் ?" பாவனைக்காகப் பசிக்கும் பக்தப் பிரியனான மாதவன் அத்தம்பதிகளுடைய பக்தியில் மூழ்கி, என்ன என்ன சிந்தித்தார் என்பது தெரியாது.

சற்றுநேரம் கழித்துத் தாமோதரனைச் சமிபத்திற் கழைத்து "அன்பனே! உங்களுடைய உபகாரத்தினால் எனக்குப் பெரும் சந்தோஷமுண்டாயிற்று; பாருங்கள் இரவாகிவிட்டது; வயதானசரீரம்; இந்த இருள் பரவிய இரவில் போக முடியாது. இரவு நான் இங்கேயே கழித்து விடியற் காலையில் போக எண்ணுகிறேன். போஜனத்திற்காக ஒன்றும் தேடவேண்டாம்; அரைப்படி அரிசியினால் வேலை முடிந்து போகும்" என்றார் அக்கிழத்துறவி. தாமோதரன் உத்தரவு என்று கூறினான். பிறகு மனைவியிடம் வந்து "விருந்தாளிக்குப் போகச் சக்தியில்லை. இரவு இங்கே தங்குவார். இப்பொழுது சாப்பாட்டிற்கு என்ன உபாயம் செய்வது?" என்றான். பதிவிரதைக்கு உபாயம் தெரிந்திருந்தது. சிரித்துக் கொண்டே மொழிந்தாள். "இதற்கென்ன யோசனை ? மிஞ்சியிருக்கும் முடியை நறுக்கி இப்பொழுதே ஒரு இடுமயிர் பின்னிவிடுவோம். தாங்கள்

அதை விற்றுச் சமையலுக்கு வேண்டிய பண்டங்களை வாங்கி வாருங்கள். இவ்வளவு ஏன் பிரமிக்க வேண்டும்?" மனைவியின் சொல்லைக் கேட்டுத் தாமோதரன் உள்ளம் பூரித்தது. அவன் மனைவியுடைய தலையில் மிஞ்சியுள்ள கேசத்தை முற்றிலும் அறுத்து விட்டான். இருவருங் கூடி இடுமயிர் பின்னி முன் போல் வேண்டும் பண்டங்களை வாங்கி வந்தார்கள். அம்மை விரிந்த உள்ளத்துடன் சமைக்கத் தொடங்கினாள். தனது கூந்தலறுத்த தலையை ஒரு கந்தல் துணியைப் போட்டு மூடிக்கொண்டாள்.

இந்தப் புண்ணியவதியின் அற்புதத்தியாகத்தினால் அதிதிஸேவை நடந்தேறிற்று என்று தாமோதரனுக்குப் பெரிய ஆனந்த முண்டாயிற்று. ஆனால், மனைவியின் தலையைக் காணும் போது தன் கண்களில் நின்று வரும் நீரை நிறுத்துவதும் கடினமாகத் தானிருந்தது.

சமையல் ஆகிவிட்டது. விருந்தாளி உண்ண உட்கார்ந்தார். இன்னும் கொஞ்சம் இன்னும் கொஞ்சம் என்று சொல்லிக்கொண்டே எல்லாவற்றையும் மென்று விழுங்கிவிட்டார். ஒரு எறும்புக்குக் கூட அன்னம் அங்கு மிஞ்சவில்லை. அதிதி வாயும் கையும் சுத்தி செய்துகொண்டார். தாமோதரன் அதிதிக்கு உறங்க ஒரு கிழிந்த புல்மெத்தையை விரித்தான். சாது அதில் சந்தோஷத்துடன் தூங்கினார்.

ஆஹா! சேஷ சயனத்தில், கருடனின் பீடத்தில், முனிகளுள்ளத்தில் பள்ளிகொள்ளும் ஆதிநாராயணன் இன்று பக்தர்களுடைய அன்புக்கு வயப்பட்டு இதோ பழைய புல்மெத்தையில் அயர்ந்து தூங்குகின்றார்.

பக்தர்களுடைய தூய அன்பும், அதற்கதீதனான ஆண்டவனும் என்ன!

தாமோதரன் மிருதுவாகப் பாதம் பிடிக்கத் தொடங்கினன். அவர் மனைவி கிழிந்த தன் சேலையின் முந்தானையால் விசத்தொடங்கினள். பிரேமையால் தன்னை மறந்த உலக நாயகன் வைகுண்ட சுகத்தையும் துச்சமெனக்கருதி இனிமையாக உறங்கத் தொடங்கினர். அதிதி உறங்குவதைக்கண்ட அந்தணி பதியிடம் கூறினள் :- ஐயோ, ஸ்வாமியார் மிகக் கிழவர். இவ்வளவு இளைத்த உடலுடைய இவர் விடியற் காலத்திலும் எவ்வாறு போவார்? நாளைப் புலர் பொழுதிலே பிச்சைக்காகப் போகவேண்டும். பாக்கியத்தால் ஏதேனும் கிடைத்துவிடில், அதைக்கொண்டு அதிதிக்கு உபசாரம் செய்யவேண்டும். நாம் இன்றைய தினம் போன்று நாளைய தினமும் பசியாகக் கழிப்போம்." தாமோதரனைப் போலவே அவரது மனைவியும்.

எந்தப்பொருள் நனவு, கனவு, துயில் என்னும் மூன்றவஸ்தைகளுக்கும் அப்பாற்பட்டதோ அப்பொருள் தூங்குவதும் விழிப்பதும் ஏது? இறைவன் கண்ணை மூடிக்கொண்டு எல்லாம் கேட்டுக்கொண்டிருந்தார். ஆண்டவனுக்குப் பதிபத்தினிகளுடைய இன்சொற்களையும் அதிதி சேவையிலுள்ள அளவற்ற விருப்பத்தையும்கண்டு, விழிகள் துடித்தன. ஆஹா! அத்திருக் கடைக்கண்ணினின்றும் கருணையின் தாரை ஒழுகிற்று. இப்பொழுது இறைவனுக்கு இருப்புக்கொள்ளவில்லை. உடனே மாய நித்திரையில் அவர்களை மயக்கி எழுந்தமர்ந்தார். பார்த்தார் - பதிபத்தினிகளிருவரும் தன்னடிகளில் விழுந்து கிடந்தனர்.

ஆண்டவன் அப்பதிவிரதையின் மொட்டைத்தலையில் திருக்கை சாற்றி அசைத்துக் கூறினர். "தாயே! இந்தத் தாயென்னும் சொல்லில் எவ்வளவு இனிமை. இன்னும் ஒருதரம் தாயே! என்றழைத்தல் வேண்டும். தாயே! தாயே! உன் தலை அழகிய கருங்குழலால் இப்பொழுதே நிறைந்ததாகுக. தாயே! நின்னுடல் முழுதும் பலவித மணியணிகளால் ஒளிர்ந்துகொண்டிருப்பதாகுக. நின்னவயவங்கள் ஒவ்வொன்றிலும் அழகு ததும்பி மிளிர்க." ஆண்டவன் எதை எதைச் சொல்லிக்கொண்டிருந்தனரோ அதது அவ்வாறே ஆயிற்று. பகவான் எழுந்து நின்றார். நாலு பக்கமும் விழி செலுத்தினர். பிறகு அருள்நிறைந்த குரலில் கூறினர். 'ஏ குடிசையே, நீ அரண்மனையாக மாறுக' உடன் அவ்வாறே ஆயிற்று. பிறகு கூறினர். 'வாயிலே! நீ பொன்மணி நெல் இவைகளால் நிறைகுக' அவ்வாறே ஆயிற்று. பிறகு, இறைவன் இருவருடைய சிரசில் தன் பொற்கைகளை வைத்து அமிழ்தப் பார்வையிட்டு நீங்களிருவரும் இன்பமாக இல்வாழ்க்கையை முடிப்பீர்களாக. வாழ்க்கை முடிவில் பரமபதத்தை யடைவீர்கள். வாழ்க்கையிலும், மரணத்திலும் நான் உங்களுடனிருப்பேன்' பக்தர்களுக்கு அரிய ஆசியளித்து அவ்வாண்டவன் அவ்விடத்தைவிட்டு மறைந்தனர்.

வைகறைத் தென்றல் இரவின் முடிவைத் தெரிவிப்பதற்கு எங்கும் சென்றது. ஆதித்தன் அருள் புரியத் தன் கரத்தை மண்ணினிடை நீட்டினன். கூடுவிட்டு மரக்கிளைகளி லமர்ந்த புள்ளினங்கள் சிறகு நீவிப் பாடின. ஆமாம், பொழுது விடிந்தது. பிராமணி விழித்தாள். கண் திறந்ததும் வியப்பிடை

மூழ்கிவிட்டாள். சிந்தித்தாள்; "அடே இதென்ன என் கிழிந்த சேலைத்துண்டு எங்கே? இப் பெரு விலை பெற்ற ஆடை எங்கிருந்து வந்தது? என்னுடல் நகை யொளியால் மிளிர்கின்றதே!" தலையில் கையை வைத்துச் சிந்திக்கத் தொடங்கினாள். கை கூந்தலில் பட்டதும் அவ்வம்மையின் வியப்புப் பதின்மடங்கு பெருகிற்று. "அடே மொட்டைத் தலையில் ஒரே இர வில் இவ்வளவு அழகிய கூந்தலா? அடே இப்பழ வுடலில் இவ்வளவழகா? யானென்ன கனவு கண்டு கொண்டிருக்கிறேனா? அந்தக் கிழத்துறவி எங்கே?" அம்மை பரபரப்புடன் எழுந்தாள். இப்பொழுது அவருடைய வியப்பு, கற்பனைக்கு எட்டாத நிலைமை யில் நின்றது. "அது குடிசையில்லை. அது புல் மெத்தையல்ல." அந்தப் பார்ப்பனி குசேலரைப் போன்று பலபடியாகச் சொல்லிக்கொண்டிருந்தாள். "ஆகா இவ்வளவு பெரிய அரண்மனை! இவ்வளவு பெரிய அறைகள்! எங்கும் மணி, பொன், தானியம், பட்டுடைகள் இவைகள் நிறைந்து இருக்கின் றனவே. அடே ஸ்வாமிகளுடைய வடிவம் மாறி யிருக்கின்றதே. இம் மன்மதப் பொலிவு எப்படி யுண்டாயிற்று? இது என்ன ஆச்சரியம்!" பார்ப்பனி பதியை விளிக்கச் செய்து உரத்த குரலில் கூறினாள். "பாருங்கள் இது என்ன ஆச்சரியம்!"

தாமோதரன் கண்ணைத் துடைத்துக் கொண்டே என்ன! என்ன! என்று எழுந்து உட்கார்ந்தான். நாலு பக்கமும் வியப்புடன் பார்த்தான். அந்த அம் மையாருக்கு நேரம் ஆவதில் சம்மதமில்லை. கணவன் கையைப் பிடித்துப் பரபரப்புடன் வெளிவந்து சொன்னாள். "நாதனே, இவற்றை யெல்லாம் பிறகு

பார்ப்போம். முதலில் அவ் வதிதியைத் தேடுவோம். அவரெங்கே? அவர் சாதாரணத் துறவியில்லை.'' தாமோதரன் பார்த்தான். முன்னேயுள்ளவை ஒன்றுமில்லை. எல்லாம் மாறியிருக்கின்றன. எம்மைத் துன்பங்களையும் சாம்பல் பொடியை நீக்கி, விண்ணவர்க்கரிய ஐஸ்வரியத்தின் குளிர் ஒளிக்கதிர்கள் எங்கும் துளும்பிக் கொண்டிருந்தன. அவனுக்கு முன் போகமுடியவில்லை. அன்பிற் படிந்த அந்நிலைமையில் அவன் அங்கே நிற்கலாயினன். உடலில் மயிர் சிலிர்த்தது. கண்களில் நீர்த்தாரை வழிந்தது.

தாமோதரன் தழுதழுத்த குரலில் கூறினன். "பாவாய் இரு. அக் கிழ அதிதி ஒரு சாதாரண மனிதரா? அவரைத்தேடி வெளிச்செல்ல அவராக எப்பொழுது அருள்புரியக் கருதுவாரோ, அப்பொழுது அறையிலும் காக்ஷியளிப்பார். எதுவரை அவர் எண்ணமாட்டாரோ, அதுவரையிலும் உள்ளும் புறமும் எவ்வளவு தேடினும் வெளிப்படார். சொல்லு அச் சனாதன பரம புருஷனைத் தேட எங்கு போவது? அவரெங்குந்தான் நிறைந்திருக்கின்றார். இல்லையென்றால், எங்குந்தானில்லை. காக்ஷியளிக்கக் கருதினால் இங்குமளிப்பார். இல்லையெனில் எங்குமில்லை. என்ன? இப்பொழுதும் அவரை உனக்குத் தெரிந்துகொள்ள முடியவில்லையா? எவருடைய மகிமையால் தண்ணீரில் கல் மிதந்துகொண்டிருந்ததோ-எவருடைய திருவடித் துகள் பட்டதால் கற்பதுமை கட்டமுகுவாய்ந்த இளம் பெண்ணுயிற்றோ-எவருடைய அங்கம் தீண்டியதால் கூனி குறையா எழில்பெற் றோங்கினளோ அந்த அன்பர் விருப்பு இறைவனன்றி வேறெவர்தான் செய்ய வல்லவர்! நீ நிமிர்ந்து பார். காணப்படும்

பிரமாண்டத்தைப் படைத்தளித்து அழிக்கும் அப் புராண புருஷனே கிழத்துறவி வேடம்பூண்டு உன் னில்லத்தைத் தூயதாக்க எழுந்தருளினர். தேவி வா! வா!! நாம் அவரை யெளிய குரலில் மன்னிப்பு வேண்டுவோம். நாம் அவரை ஒரு சாதாரண மனித ரென்று எண்ணிவிட்டோமே. ஒன்றுந் தெரிந்திலதே. அவருடைய பணிவிடையில் எத்தனை பிழைகள் பற்றி யிருக்குமோ?" என்று சொல்லித் துதிக்கத் தொடங்கி ஞர்கள்.

தாமோதரனும் மனைவியும் அன்பில் மிதந்து நீண்டநேரம் இறைவனை வாழ்த்தினர். இருவரும் அழுதனர். தரையில் விழுந்துருண்டனர். மயக்க முற்றனர். முடிவில் மூர்ச்சை தெளிந்து பெருந்திரு விழாச் செய்ய எத்தனித்தனர். அவர்களுடைய வாழ்க்கை முழுவதும் இறைவன் திருப்பணியிலும் அடியவர் திருப்பணியிலும் ஏழை யெளியோர்கள் பணியிலும் கழிந்தது. முடிவில் இருவரும் பரம பதத்தை யடைந்தனர்.

ஆண்டவனும் அவனடிமையும் வாழ்க

# நீலாம்பரதாசர்



உலக இன்பம் இறையின்பம் இவ்விரண்டினுள், எது மிகக் கவர்ச்சி தருவது? இவ்வினவிற்கு மக்களில் பெரும்பாலோர் உலக இன்பம் தான் மிகக் கவர்ச்சியென்பார்கள். நம் போன்ற சிற்றின்பத்தில் பேராசை கொண்ட மக்கள் இவ்வாறுரைப்பது இயற்கையே. ஆனால், மெய்ஞ்ஞான முற்ற பெரியோர்கள் இவ்வுரையில் ஒருசாரமுங் காணார். "ஏதோ அறியப்படாத ஒரு காரணத்தினால் மனிதன் எப்பொழுது அக்கம் பக்கத்திலுள்ள பொருள்களையும், தன்னையும் மறந்து கடவுளே! கடவுளே! என்று கூவி, பித்தனைப் போலத் தன் மனம் சென்றவழி அங்குமிங்கும் திரிகிறானே அவனை, இச்சம்சாரத்திலுள்ள ஒரு பொருளும் தன்பக்கத்தி லிழுக்க வல்லமையுடையதாகாது" என்று அவர் உணர்ந்துள்ளார் இவ்வண்ணம் கடவுளே கடவுளே யென்னும் சொல்லில் ஆன்ம வுணர்ச்சியை உண்டுபண்ணும் ஒரு தனி சக்தியுண்டு. ஆதலால் இறைவனை புவன மோகன் என்பார்கள். பெரும் பாக்கியத்தால் எவன் அவருடைய கவர்ச்சியினாலிழுக்கப் படுகிறானோ அவனுக்குத்தான் அவருடைய மாட்சிமை புலப்படும். நம்போன்ற சாதாரண மனிதர் இன்றளவும் அவர் பக்கம் இழுக்கப்பட வில்லை. இதன் முன்னால் அவருடைய மாட்சிமை உண்மையாக உணரமுடிய வில்லை. எந்த நல்வினையாளர்க்கு அவருடைய கவர்ச்சி அனுபவப்பட்டிருக்கின்றதோ அப்பெரியோரின் சேர்க்கை

யால் நாமும் கடவுளின் எல்லையற்ற மாட்சிமையின் ஒளியைக்காண வல்லவ ராவோம்.

அன்பர் நீலாம்பர தாசருடைய பாக்கியம் அளவற்றது. அவர் புவன மோகனனுடைய கவர்ச்சியா லிழுக்கப்பட்டார். அவருடைய மாட்சிமையை யறியவும் செய்தார். நீலாம்பரதாசர் எல்லாவகையிலும் சுகியாகவே யிருந்தார். அவருக்கு, கற்பும் பொற்பும் வாய்ந்த மனைவி, மகன், பொருள், உடன்பிறந்தார், சுற்றத்தார், பெருமை முதலிய அனைத்தும் வாய்ந்திருந்தன. ஆனால், எக்கணத்தில் அவர் ஒரு மோகன மந்திரத்தால் கவரப்பட்டுக் கடவுளிடத்தில் காதல் கொண்டனரோ, அக்கணத்திலேயே எல்லாப் பொருள்களிலுமுள்ள தளை தளர்ந்தது. அவர் தன்னை—மனைவி, மகன், பொன், மானம் முதலிய மாயைத் தளை தடைப்படுத்தியதாகவும், அவைகளின் சேர்க்கையினால் தன் வாழ்க்கை வீணாகிற தென்றும் உணர்ந்தார். அவருள்ளத்தில் அடிக்கடி இவ்வெண்ணம் தோன்றிக்கொண்டிருந்தது. முடிவில் அவர் எல்லாவற்றையும் தியாகம் செய்து வீட்டை விட்டுப் புறப்பட வுறுதிகொண்டார்.

நீலாம்பர தாசருடைய இவ்வுறுதி பேதைகளின் மனப்பான்மை போல கேவலம் மனதில் தோன்றி மறைந்து விடவில்லை. இந்த நிச்சயம் அவரை முற்றத் துறந்த முனிவராக்கியது. ஆகா! அவ்வாறு இல்லையேல் கடவுளின் கவர்ச்சியின் மாட்சிமைதான் என்னவாகும்? நீலாம்பரதாசர் குழம்பிய மனத்துடன் ஜகன்னாதப்பெருமான் சன்னதியை நோக்கிச் சென்றார். அவர் ஆண்டவன் தெரிசனத்திற்காக மிகத் துடிதுடித்தனர். அவர் பேரன்பு வாய்ந்த தாயைப்பிரிந்த

சேயின் நிலைமையை யடைந்தார். சிறுபாலன், தன்னைப்பிரிந்த தாயை நினைத்து நினைத்து எவ்வாறு கதறுவானோ அவ்வாறே நீலாம்பர தாசரும் உள்ளத்தில் இடை யிடின்றிக் கடவுளை நினைத்து விம்மி விம்மிக் கதறினர். அவர் இறைவனை யெண்ணும் துரிதப்படியே ஜகனாத புரியைச் சேர விரைந்து நடக்கலானார்.

அவர் வழியறியாதது போல, ஊண் உறக்கமும் அறியாதவராய்க் கண்ணை இமைத்தும், ஒருபோது திறந்தும் இறைவனடியை சிந்தித்துக் கொண்டே சென்று கொண்டிருந்தார். அன்பன் தான் பற்று வைத்த பொருளையடைய அவ்வாறு தான் திக்கற்ற தன்மையை யடைவான்; நீலாம்பரதாசரின் ஊருக்கு ஜகனாதபுரி அண்மையி லில்லை. வடதிசையிலிருக்கும் அவர் வீடெங்கே? தென்றிசையிலிருக்கும் ஜகனாத புரி யெங்கே? அவர் நடந்துகொண்டே யிருந்தா ரன்றி வேறொன்றையும் அறிந்தாரில்லை. இப்படிப் பல மலைகள், ஆறுகள், கால்வாய்கள், மனித சஞ்சார மில்லாத கொடிய அடவிகள் இவை யனைத்தையும் கடந்து கங்கையாற்றின் கரையை அடைந்தனர். மழைகாலம்; கங்கையாற்றில் வெள்ளம் பெருகி யிருந்தது. எங்கும் கரைகாண முடியவில்லை. கங்கா நதியில் எழும் பேரலைகள் காண்போர் மனதில் பேரச்சம் விளைத்தன.

நீலாம்பரதாசருக்கோ ஆற்றைக் கடந்து செல்ல வேண்டும். படகின்றி அக்கரை செல்ல வேறு வழி யில்லை. ஆனால், படகு ஒன்றுகூடக் காணவில்லை. நீலாம்பரதாசர் உள்ளத்தில் மிகக் கவலைகொண்டனர். அச்சமயத்தில் அவர் அடைந்த துயரம் அளவிட்டுக்

கூறமுடியாது. அவர் பல நாடுகளையும் காடுகளையும் கடந்து வந்தவர். உடல் முற்றிலும் களைப்புற்றிருந்தது. சூரியன் அஸ்தமன மலைக்குச் செல்ல விரைந்தான். அதனால், இவரும் இருட்டுமுன் அக்கரை செல்ல வேண்டும். ஆனால், அவர் எவ்விடத்தை யடைந்தாரோ அவ்விடத்திலிருந்து ஊர் சேய்மையில் இருந்தது. இப்படி ஆள் புளக்கமற்ற அவ்விடத்திலிருந்து கரை யெவ்வளவு தூரம் என்று யாரிடம் கேட்பது? இந்நிலைமையில் ஹரியைப் பஜனை செய்வதைத் தவிர வேறொரு வழியும் தோன்றவில்லை.

நீலாம்பரதாசர் ஆண்டவனைத் தியானிக்கத் தொடங்கினர். பஜனை செய்வதில் சிறிது நேரம் கழிந்தது. அப்பொழுது ஒரு செம்படவன் வலைவிசி மீன் பிடித்துக்கொண்டே படகுடன் அங்கு வந்தணைந்தான். அவனைக் கண்டதும் நீலாம்பரதாசருக்குப் பெரு மகிழ்ச்சி யுண்டாயிற்று. அவர் இறைவனுக்கு நன்றி செலுத்தி, தோணியோட்டியைக் கூவியழைத்தார். "ஐயா! தயவு செய்து படகைச்சற்று இந்தப் பக்கம் கொண்டுவாரும். இந்த ஆபத்தில் வீழ்ந்திருக்கும் என்னை அக்கரை போய்ச்சேர உதவி செய்யும். பணத்திற்குக் கவலைப்படவேண்டாம். அக்கரை யடைந்ததும் நீர் எதைக் கேட்பீரோ அதைத் தருவேன். நிச்சயம்" நீலாம்பரதாசருடைய குரலைக் கேட்டதும் செம்படவன் படகைக் கரையோரம் அணைத்து மிக இனிமையாகப் பேசிப் படகில் ஏற்றிக் கொண்டான். படகில் ஏறினதும், நீலாம்பரதாசரின் மகிழ்ச்சி அளவு மீறியது. அவர் மனதாலேயே ஆண்டவனுக்கு நன்றியறிவை மிகவும் செலுத்தினர். படகோட்டியும், அவரைத் தன்படகில் ஏற்றிக்கொள்ள

வாய்த்தமையால் அளவற்ற உவகை கொண்டு ஆண்டவனுக்கு நன்றி பல செலுத்தினுன். இருவரும் நன்றி செலுத்துவதற்குரிய காரணங்களில் பெரிய வேற்றுமை யிருந்தது.

நீலாம்பரதாசர் இறைவனைப் பொறுக்கெனப் பார்ப்பதற்குத் துடித்துக்கொண் டிருந்தார். இன்னிலைமையில் இறைவன் புணையை யனுப்பிக் கங்கையின் அக்கரை யடையத் திருவருள் புரிந்தாரென்று எண்ணி நன்றி செலுத்தினுர். படகோட்டியோ! ஒரு துணையும் வலியுமில்லாத ஒரு மனிதனைத் தன் கொள்ளைக் ககப்படுத்தியது இறைவன் உதவியென நன்றி செலுத்தினுன். நீலாம்பரதாசரை நதியின் நடுவில் கொண்டு போய்க் கொன்று இருக்கும் பொருளனைத்தையும் பறிக்க எண்ணுகையில், அவன் மனம் பொலிவெய்தியது. நீலாம்பரதாசருடைய வாழ்க்கைப் பொருள், அவருடைய முழு உடமை, அவருடைய துணிப் பையில் அல்ல. ஒருவராலும் கொள்ளையிட முடியாத உள்ளத்தினுடைய ஆழ்ந்த பையில் தானிருக்கிறது என்று, பாவம் அம்மூடனுன செம்படவன் உணர்ந்தானில்லை. அப்பாமரனுக்கு நீலாம்பரதாசரின் நிலைமை எவ்வாறு அறிதல் கூடும்? அவன் அவரைச் சாதாரண யாத்திரிகன்; பணப்பையுடன் அங்குமிங்கும் திரிபவன் எனக் கருதி, கொலைசெய்து கொள்ளையடிக்கும் ஆவலுடன் தோணியை நதியின் நடுவில் ஓட்டிச் சென்றுன்.

படகோட்டி, கரையைவிட்டுப் படகை ஆற்றின் நடுவில் ஓட்டிச் செல்வதைக்கண்ட தாசர் கூறினுர். "அப்பா! நீ பெரிய துணிச்சலுடையவ னென்று தோன்றுகிறது. இல்லை யெனில் இப்பெருஞ் சுழற்

காற்றில் நதியின் உள்ளே தோணியை ஓட்டிச்செல்ல எவன் துணிவான்? ஆனால், அப்பா சூரியன் மறைந்து கொண்டிருக்கிறான். பொழுது போகுமுன்னே அக் கரையை யடைந்து விடுவோமாயின் நன்மையாகும். ஆகையால் படகை கரைப்பக்கம் ஓட்டிச்செல்'' ஆனால், அவர் சொல்லைக் கேட்பது யார்? படகோட் டியின் மனதில் வேறு சொல் இருந்தது. அதனால், அவன் தோணியை நதியின் நட்டநடுவிற்கே நடத்திக்கொண் டிருந்தான். நீலாம்பரதாசருடைய சொல்லுக்குப் பதிலாக, அவன் புன்சிரிப்புடன் முகத் தைத் திருப்பிக்கொண்டான். இச்செய்கையைக் கண்ட தாசர் அவனுடைய கெட்ட எண்ணத்தைச் சட்டெனத் தெரிந்துகொண்டார். ஒருகணம் சற்றுத் திகைத்தார். ஆனால், இத்தகைய சமயத்தில் திகைப் பது பொருத்தமன்று என்றெண்ணி, அவர் இறைவ னிடத்தில் நம்பிக்கை கொண்டு துணிவுடன் கூறத் தொடங்கினார். ''என்னப்பா உன் குறிப்பு என்ன? என்னை நீ கொன்றுவிட விரும்புகின்றனையா? நல்லது, நானுந்தான் பார்க்கின்றேன் நீ எவ்வாறு கொல்கின் றாய் என்பதை'' தாசருடைய மொழியைக் கேட்டுச் செம்படவன் உரக்கச் சிரித்துக் கெம்பீரக் குரலில் சொல்லத் தொடங்கினான். ''ஓகோ நீ ஒரு அப்பாவி மனிதன் எனத் தோன்றுகின்றது. ஆனால், இப்போ உனது காலம் முடிவடையப் போகிறது. அவ்வளவு தான், கொஞ்ச நேரந்தான். இப்போ உனக்கு யாரை நினைக்கவேண்டுமோ நினைத்துக்கோ உன்னை இப்போ கைலாசத்துக்கு அனுப்பி வைக்கிறேன்.''

நம் தாசர் படகோட்டியின் சொல்லைக்கேட்டுத் தயங்கினார். அது இறப்பதை நோக்கி ஏற்பட்ட

தன்று. இறைவனைத் தெரிசிப்பதற்குமுன் இறக்க நேர்ந்ததே யென ஏற்பட்டதாகும் அத் தயக்கம். அவர் மன ஒருமையுடன் துணையற்றவருக்குத் துணையும், வலியற்றவருக்கு வலிமையுமாக இராநின்ற இராமனை யெண்ணிச் சொல்லத் தொடங்கினர். "ஓ ஆண்டவனே! எளியார்க் கிரங்குவோனே! என்னைக் காப்பாற்றுவாயாக! என்னைக் காப்பாற்றுவாயாக! நீ இதற்குமுன் எத்தனையோ அடைக்கலம் புக்க அடியவர்களுடைய துன்பத்தைத் தூரத்தில் தூரத்தியிருக்கின்றாய்! இன்று உன்னையே அடைக்கலம் புகுந்த இந்த ஏழையின் துக்கத்தையும் நீக்கியருள்வாயாக! இவ் வாபத்தாகும் கடலில் வீழ்ந்திருக்கும் என்னை உனதருளாகும் படகால் காப்பாற்றுவாயாக! ஏ பிரபுவே! காப்பாயாக! ஒரு தரம் காக்ஷியளித்த பிறகு எது நடப்பினும் நடந்தேறட்டும். ஆனல், அதற்குமுன் சாகவிடாதே."

அன்பர்க்கேற்ற ஆண்டவன் துன்பமுற்ற அன்பனுடைய கூக்குரலைக் கேட்டார். அவருடைய உள்ளத் துயரத்தையுணர்ந்த அச்சமயத்திலேயே ஒரு வாலிப வீர க்ஷத்திரிய வேடம்பூண்டு கங்கைக் கரையில் தோன்றி, உரத்த குரலில் செம்படவனை அழைத்துச் சொல்லத் தொடங்கினர். "ஏய்! அடேய்! படகோட்டி இங்கே வா! உயிருடன் நீ யிருக்க விரும்பினுல் விரைவில் இங்குவா! தோணியைச் சட்டென கரைக்குக் கொண்டுவா!"

ஹரியின் குரலோசை அப்படி இப்படி இல்லை. அதைக் கேட்டதும் அவன் செருக்கு இறந்தது. அச்சத்தினுல் அவனுடல் வெடவெடென நடுங்கிற்று. தோணியோட்டுவதற்கும் முடியாமல் போயிற்று.

ஆனால், சிறிது கேட்டும் கேட்காதவன்போல் தோணியைக் கொஞ்சங் கொஞ்சமாக முன்னுக்கு நகர்த்திக் கொண்டிருந்தான். பகவான் மீண்டும் அழைத்துக் கூவினார். ஆனால், அவன் கேட்டபாடில்லை. உடனே சரேலென ஒரு பாணம் வந்து தோணியில் தைத்தது. வில்லின் ஒலியைக்கேட்டுப் படகோட்டி திடுக்குற்றுப் போனான். பாணத்தின் தெய்வ ஒலியால் அவன் கண்கள் வெந்து புழுங்கின. அவன் சிந்திக்கலானான். "ஐயோ இப்போது என்ன ஆகும்! இந்த மனிதன் எல்லாச் செய்தியையும் சொல்லிவிடுவானானால் அப்பொழுது, அவன் என் வேலை முழுதும் முடித்து விடுவான். படகைக் கரையில் சேர்க்காவிடினும் தப்பிக்க முடியாது. அவன் அம்பெய்து கொன்றுவிடுவான்." அவன் சிந்தித்துக்கொண்டே தோணியின் முகத்தைக் கரைமுகமாகத் திருப்பினான். கரைக்கு வந்ததும் அந்த வீர க்ஷத்திரியன் அடிகளில் அடியற்ற மரம் போல் வீழ்ந்தான். நீலாம்பரதாசர் இதைக் கண்டும் கேட்டும் ஸ்தம்பித்துப் போனார். இது கனவா நனவா என்பதைக்கூட அவர் உணர்ந்தாரில்லை.

பிறகு, மாயக்காரனை க்ஷத்திரிய வீரன் சீற்றங் கொண்டு படகோட்டியை அதட்டி "ஏ! துஷ்டா! நான் என்றும் எப்பொழுதும் இங்கேயே சுற்றிக் கொண்டு கண்காணித்துக் கொண்டிருக்கின்றேன். அன்றியும், உன்னைப்போன்ற கொள்ளைக்காரர்களை நான் பிடிக்கிறேன். சொல் இச்சமயத்தில் நான் உன் தலையை எடுக்கிறேன். உன்னைக் காப்பவன் யார்?" வீர க்ஷத்திரிய வேடம்பூண்ட ஆண்டவன் திருவாய் மொழியைக்கேட்டுத் தோணிக்காரனுடைய உயிர் துடித்தது. அவன் பிணம்போல அக்காவலன் காலில்

கிடந்தான். அப்பொழுது ஆண்டவர் சாந்தமூர்த்தி யாகி அமர்ந்த குரலில் நீலாம்பரதாசரை நோக்கித் திருவாய்மலர்ந்தருளினார். "ஹே அந்தணரே! தாங்கள் அந்தப் படகைவிட்டு இறங்கிவிடுங்கள். தெரியுமா நான் யாரென்று? யான் இந்த இடத்தைக் கண்காணிப்பவன். இவ்வாற்றோரத்தையும், மலர்ச் சோலையையும் காத்து வருகிறேன். எவனாயினும், இந்த வனத்தில் துன்புறுத்துவதோ, கொள்ளையிடுவதோ, பணம் பறித்துக்கொல்லுவதோ செய்தால் அவனுக்குத் தக்க தண்டனை விதிக்கத்தான் நானிங்கு இருக்கின்றேன். பிரயாணிகளை இப்படிக் கொடியவர்களினின்றும் காப்பாற்றுவதற்காகவே நான் இன்று இவ்வேடத்தில் வில்லுங் கையுமாக வந்தேன்" க்ஷத்திரிய வேடம் தாங்கிவந்த பகவானுடைய மொழியைக் கேட்டு தாசர் கூறலானார்.

"ஐயா! இன்று என் பெரும்பாக்கியம் தங்களுடைய அரிய காக்ஷி கிடைத்ததே. தாங்கள் தான் இன்று மரணவாயிலின்றும் என்னை இரக்ஷித்தருளினீர். என்னுள்ளம் இப்பொழுது ஜகனாதப்பெருமான் திருக்காக்ஷியின் பொருட்டு வெம்பிக் கொண்டிருக்கிறது. அதனால், நான் எல்லாவற்றையும் விட்டு புறப்பட்டேன். தாங்கள் அருள்புரிந்து கங்கையின் அக்கரையை யடைய பாதையைக் காட்டுங்கள். நான் விரைவில் சென்று நீலாசலபதியைக் கண்குளிரக் காணவேண்டும்."

"ஐயோ அந்தண! உன்னுயிர் நாயகன்—உன்னுயிர்க் காதலன்—உன் முன்னில் அல்லவோ நிற்கின்றார். அவருடன்தானே பேசிக்கொண்டிருக்கின்றாய். என்ன உனக்கு இப்பொழுது அவரை அறிய முடிய

வில்லையா ? ஆம் எங்ஙனம் அறிவாய்? எதுவரையிலும் அவர் தன்னை யறிவிப்பதில்லையோ அதுவரையிலும் அவரை ஒருவரும் அறிய வியலாது. எதுவரையில் அவரது அருள் உளவாகாதோ—எதுவரையில் அவருக்குத் திருவுளமில்லையோ அதுவரையிலும் அறிய இயலாது. வேண்டுமானால், எத்தனை ஜெபம், தபம், யோகம், யாகம் முதலியவை செய்தாலும் அவையனைத்தும் பயனற்றனவே யாகும். கோடிக்கணக்கான உபாயங்கள் செய்யினும் அவனையறிந்து கொள்ள முடியாது."

தாசருடைய வசனத்தைக் கேட்டுப் பகவான் கூறினார். "அந்தணரே! தாங்கள் திரு ஜெகநாதப் பெருமானுடைய தெரிசனம் செய்யும் பொருட்டுத் தானே வீடு விட்டீர். அதனால், தங்களுடைய இச்சை முற்றுப் பெறுமேயன்றி இடையில் நின்று விடாது. எல்லா உலகிற்கும் அதிபரான பகவான் தங்களுக்கு உதவிபுரிவார். இந்த சாதாரண நதியைக் கடப்பது பெரிய காரியமல்ல; தாங்கள் பிறவிக்கடல் முழுவதையும் எளிதாகக் கடக்கும் திறமையைப் பெற்று விட்டீர்" நீலாம்பர தாசருக்கு ஆறுதலளித்த பிறகு, ஆண்டவன் செம்படவனிடம் கூறினார். "பிணத்தைப் போன்று இங்கு படுத்துக் கொண்டிருப்பதால் ஒன்றும் ஆகாது; எழுந்திரு; இவ்வந்தணரை விரைவில் அக்கரையில் சேர்த்துவிடு; நான் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே அங்கு இவரைச் சேர்த்துவர வில்லையேல் இவ்வில்லைப் பார்த்தாயல்லவா ? எழுந்திரு நிமிர்ந்து நில்."

க்ஷத்திரிய வேடங்கொண்ட பகவானுடைய திருவாயினின்றும் வந்த மொழிகளைக் கேட்டு, மீன்

வலையனுடைய உயிர் திரும்பி வந்தது. ஒரே மூச்சி லெழுந்து பகவானை வணங்கி, பிழையைப் பொறுத்து மன்னிக்கும்படி வேண்டினுன். முடிவில் நீலாம்பர தாசரைத் தோணியிலமர்த்தி அக்கரைக்குச் செலுத் தினுன். இப்பொழுது செம்படவன் மனம் திரும் பிற்று. அவனுள்ளத்தில் எவ்விதமான கெட்ட எண்ணமுமில்லை. அவன் வாயினின்று இப்பொழுது ஒரு கடுஞ் சொல்லும் புறப்படவில்லை. பக்தன் சேர்க் கையும் பகவான் காக்ஷியும் கிடைத்ததால் அவனு டைய அவகுணங்களனைத்தும் நற்குணங்களாக மாறின. அதனுல் ஆண்டவன் திருநாமங்களைச் சொல்லி, அதோ படகோட்டி செல்லுகிருன்.

பார்த்துக் கொண்டிருக்கையிலேயே தோணி கங்கையின் அக்கரையை யடைந்தது. தாசர் இறங் கினுர். இங்கு பகவானும் மறைந்து கொண்டனர். பட கோட்டியினுடைய உள்ளத்தில் தன் தீச்செயலைப் பற்றி இடைவிடாத துன்பம் தோன்றிக் கொண்டி ருந்தது. அவன் நீலாம்பரதாசருடைய திருவடிகளில் விழுந்து பலவாறு மன்னிப்புக் கேட்டான். தாசர் மிக மகிழ்ச்சியுடன் அவனுக்கு ஆசியளித்து முன் சென் ருர். பற்பல நாடு, நகரம், காடு, மலை, ஆறு, குளம் இவைகளைத் தாண்டிக் கொண்டு சிலநாட்களுக் கப்பால் திருஜகனுதபுரம் அடைந்தார்.

தெய்வாதீனமாக அன்றைக்கே தேர்திருவிழா. நகரமெங்கும் மகிழ்ச்சியும் உற்சாகமும் பரவியிருந் தன. ஹரி! ஹரி! வாழ்க! வாழ்க! என்ற பெரும் ஆர வாரத்தால் ஆகாயம் நிரம்பி இருந்தது. இனிய முழக் கத்தோடு கலந்த குயில் குரலியர் இன்னிசையால் நகரமெங்கும் நிரம்பியது. ஆடல்பாடல்களுக்கு எங்

குங்குறைவே இல்லை. செவி எப்பக்கம் செல்லுகின்றதோ அப்பக்கமெல்லாம் இன்ப ஆரவாரமே கேட்டது. கண் சென்ற விடமெல்லாம் இன்பப் பொலிவின் காட்சியே தென்பட்டது. பலராமர், சுபத்ரை, ஜகன்னதப் பெருமான் வெவ்வேறு சிறந்த திருத்தேர்களில் திருவுலா வந்து கொண்டிருந்தனர். அன்பர் கூட்டம் பேரானந்தத்துடன் தேரை இழுத்துக் கொண்டு வந்ததும் பெருமுழக்கத்துடன் தேர்கள் நகர்ந்து கொண்டிருந்தன. தொண்டர் கூட்டம் இரண்டு கைகளையும் உயர்த்தி ஹரே! ராம! ஹே ராம! என்று கூவிக் கூத்தாடிற்று. ஆனந்தத்தின் ஆவேசத்தால் சிலர் சல்லரித்தாள மிட்டுத் துள்ளிக்கொண்டிருந்தனர். சிலர் விழிநீர் பெருக்கி மெய்சிலிர்த்து நின்றனர். சிலர் கற்சிலைபோல் அசைவற்று நின்றனர். இதே சமயந்தான் நீலாம்பரதாசரும் தேரருகில் வந்தார். இன்றைய அவருடைய ஆனந்தம் கற்பனைக்கு எட்டாதது. விழிநீர் ஓய்வின்றி ஒழுகியது. பல நாள் செய்த யாத்திரையில் அவருக்கு வழியில் உண்டான பசி, தாகம், குளிர், வெப்பம், இன்னும் பற்பல இடையூறுகள் அத்தனையும் மறந்தே போய்விட்டது. இன்பக் கண்ணீரின் தூய ஒழுக்கில் மூழ்கியதன் பயன் இதுவே.

நீலாம்பர தாசர் ஜகன்னதப்பெருமான் அன்பில் பரவசமாகித் தன் உட்கருத்தைப் பிரபுவிடம் தெரிவித்தார். அன்பர் ஆண்டவருடைய விழிகள் சந்தித்ததும் ஒரு இரகசிய சம்பாஷணை நடைபெற்றது. ஆண்டவனுடைய திருமுகத்தைப் பார்த்துக்கொண்டே அடியற்ற மரம்போல் தேரின் முன் விழுந்தார். அவர் விழுந்ததும் தொண்டர்கள் அருகில் ஓடினர்;

பார்த்தனர்; தாசருடைய உடலினின்றும் உயிர்ப் பறவை பறந்தோடிவிட்டது.

எந்தப் பறவை ஒரு கணம்முன், ஹரே! ராம! ஹரே! ராம! ராம! ராம! ஹரே! ஹரே! ஹரே கிருஷ்ண! கிருஷ்ண! கிருஷ்ண! ஹரே! ஹரே! என முழக்கிக் கொண்டிருந்ததோ, அந்தப் பறவை எங்கு பறந்து போயிற்று? நிச்சயமாக ஆண்டவனுடைய பரம பதத்தை யடைந்திருக்கும். நீலாம்பரதாசருடைய மரணச் செய்தி எங்கும் பரவியது. அம் மரணச்செய்தியைக் கேட்டு எல்லோரும் திகைத்து இவ்வரிய மரணத்தை வாழ்த்திப் பொருமை யுற்றனர்.

ஆகா! அன்பர் மகிமை எவ்வளவு அபாரம்! அவருடைய மரணம் இம்மரண லோகத்தில் மரணமற்றிருந்தது.

"நத்தம் போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது" —குறள்

இன்றும் அவருடைய மரணத்தின் வெற்றி முழக்கம் ஜகனாதபுரியில் அங்கங்கு ஒலித்துக்கொண்டிருக்கிறது.

ஆண்டவனும் அவனடிமையும் வாழ்க.

2000